வண்டு நாடுவதோ வாச நறுமலரை

வண்டு விழி மாதர் நாடுவதோ சாரதாஸை

பாங்கான பட்டாடைகளுக்கு..



# சாரதா'ஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான பெயர்

தன் பில்டிங், மவுண்ட்ரோடு,
சென்னை-2. போன்: 87177.

32, N.S.B. ரோடு,
திருச்சி-2. போன்: 7077.



# இப்போது!

நீடித்த அழகு
நவீன நாகரீக வசதி
இரண்டையும் உங்கள்
சமையலறைக்குச் சேர்ப்பது

# ஹரால்ட்வேர்



சமைத்தவுடன் பரிமாறும் பாத்திரங்கள் உபயோகிப்பதில்
நீங்கள் பெருமையடைவீர்கள்!

**ஹாரால்ட்வேர்-சமையலறையானாலும் சரி சாப்பாட்டு மேசையானாலும் சரி...ஏற்றமிகு எழில் சேர்க்கும்.**

நாகரீக இல்லத்தரசிக்கு உகந்த சமையலறைப் பாத்திரங்களின் சீர் வரிசை

**ஹாரால்ட்வேர்-கண்ணுக்கு-கட்டுறுதி வாய்ந்தது.**

பல்லாண்டுகள் நீடித்து ஒளி சிந்தும் எழில் தோற்றம். கெட்டியான தூய அலுமினியத்தினால் செய்யப்பட்டது.

**ஹாரால்ட்வேர்-இதில் அதிகப்படி கனமுள்ள அடித்தளம் இருக்கிறது.**

எனவேதான் நன்றாகப் பரவுவதோடு நீண்ட நேரம் சூடாகவே வைத்திருக்கிறது.

IS:21

SIC

உ அலுமினியம் தரம் விதிகளுக்கு உட்பட்டது



**ஹாரால்ட்வேர்-இதில் ஸ்டாண்டாகவும் பயன்படும் மூடியிருக்கிறது. உங்கள் மேசையில் சூட்டுக்கறை படியாமல் காக்கிறது.**

தேவைப்பட்ட போது, மூடியை ஸ்டாண்டாகவும் பயன்படுத்தலாம்.
ஹாரால்ட்வேர் ரகம் ப்ரையிங் பேன்ஸ், சாஸ்பேன்கள், காஸராஸ்கள், கெட்டில்கள் பல அளவுகளில் கிடைக்கும்.
எல்லாத் தருணத்திற்கும் ஏற்றபடி.

தயாரித்து விற்பனை செய்வோர்

**லாலுபாய் அமிசந்த் பி லி.**
225-27 ஜே தாதாஜி ரோடு,
பம்பாய் 400 007

---

மேலும் விவரமறிய உங்கள் ஹாரால்ட்வேர் வியாபாரியை அணுகுக அல்லது ஹாரால்ட்வேர் போல்டருக்கு எழுதுக.

தமிழ்நாடு, கேரளா, ஆந்திரப் பிரதேசம், பாண்டிச்சேரி ஆகிய இடங்களுக்கு விநியோகஸ்தர்கள்
**போபட் ஜமால் அண்ட் சன்ஸ்** ஜமால் பில்டிங் 182, பிராட்வே சென்னை-600 001

Ratan Batra/LA/TM/04-AR



கதம்பச் சிரிப்பு!
"இங்கே நல்ல இயற்கைக் காட்சிகள் உண்டாப்பா?"
"இருந்துங்க! நீங்க கொஞ்சம் லேட்டா வந்துட்டீங்க. கொஞ்சம் முன்னாடிதான் ஒரு போட்டோ எடுப்பவர் எல்லாவற்றையும் எடுத்துப் போய்விட்டார்!"
இனி நான் இங்கு ஒரு விநாடி கூட இருக்க மாட்டேன்! பிறந்த வீட்டுக்கு போகிறேன்!
ஓ, பேஷா!
என்ன அவமானம்! முன்பெல்லாம் என்னைப் பிடித்துக் கொடுத்தால் ரூபாய் 500 கொடுப்பதாக விளம்பரப்படுத்தியது போக இப்ப 50 ரூபாய்க்கு இறங்கி விட்டதே. போறது விலைவாசி இதிலேயாவதும் இறங்கி இருக்கிறதே!
இவரைப் பிடித்துக் கொடுப்பவருக்கு
இனாம்
!!!
"ஏனப்பா உனக்கு மணி அடிக்கத் தெரியாதா?"
"நன்று அடிப்பேன். ஓட்டத்தான் தெரியாது!"
ஏன் திரும்பிட்டே!
என்னை அனுப்பி விட்டு நீங்க நிம்மதியா இருந்து விடப் போறேளேங்கர கவலை வந்து விட்டது!
"பெரிய 'வில் பவர்' உங்களிடம் இருப்பதாகப் பெருமை அடித்துக் கொள்கிறீர்களே. புகையிலை போடுவதை விடுங்கள் என்று எவ்வளவோ தடவை வற்புறுத்தி யிருக்கேன். உங்க வைராக்கியம் எங்கே போச்சு!"
"எங்கேயும் போகல்லே. நீ இவ்வளவு சொல்லியும் கேட்காமல் இருக்கிறேனே. அதுக்கு எவ்வளவு 'வில் பவர்' வேணும்?"
சாமா



கொஞ்சம் சிரிங்க.
என்ன, 'டை' ரொம்ப சின்னதா இருக்கே!
599 மார்க் வாங்கியும், பாவம்... அவனுக்குக் காலேஜ்லே 'ஸீட்' இல்லையாம்!
JACKS COLLEGE
சரியான சாவு கிராக்கிங்க!
ஹோல்டான்!
ஹோல்டான்!
காடு நாடானால்..!
கல்யாணம் பண்ணச் சொல்லி ஒத்தைக் காலில் நிக்கிறான், உங்க மகன்!



# கதிரவன் உதிக்கும்...

அற்புதமான சிற்ப நகரம் தாவண்கெரே. இந் நகரம் நந்திக் கடவுளின் உறைவிடமான மைசூர் மாநிலத்தில் பருத்திப் பயிராகும் பகுதியில் உள்ளது.

இங்கேதான்-நாற்பது ஆண்டுகளுக்குமுன் காலம் சென்ற தர்மபிரவர்த்தா ராஜனஹள்ளி ஹனுமந்தப்பா தாவண்கெரே பருத்தி ஆலையைத் துவக்கினார்.

இன்று இந்த ஆலை மைசூர் மாநிலத்து ஆலைகளில் சிறந்த ஒன்றாக விளங்குகிறது. பாரதமெங்கும் விற்பனையாகும் தரம் மிகுந்த துணிவகைகளைத் தயாரித்து வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கிறது. ஆயிரக்கணக்கான மக்களுக்கு ஊதியமுள்ள வேலை வாய்ப்பினையும் அளிக்கிறது.



**தாவண்கெரே** துணிவகைகள்

*தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்*
*-பண்டைய மரபை இன்றைய வடிவாய்ப் படைக்குமிடம்!*

Thomas/DCM/8d TM





## சிரிக்கத் தெரிந்தவர்!

எழுத்தாலும் பேச்சாலும் மூச்சாலும் நகைச்சுவைக்காகவே வாழ்ந்தவர் அமரர் 'கல்கி'. தம்மையே பிறர் கிண்டல் செய்தாலும் சிரிக்கத் தெரிந்தவர்! அவரது நினைவுக்கு இந்தச் சிரிப்புச் சிறப்பிதழைச் சமர்ப்பணம் செய்கிறோம்.

இப்பத்திரிகை ஆரம்பமானபோது 'கல்கி' அவர்களின் முதல் சீடர்களாக வந்து சேர்ந்தவர்கள் திரு சோமாஸ்கந்தனும் திரு சாமாவும். இச் சிறப்பிதழை உருவாக்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றார்கள்.

'சிரிப்புக்கிடமாயிற்று' என்றால் சாதாரணமாக நாம் நல்லபடியாக எடுத்துக் கொள்ள மாட்டோம். ஆனால் இந்தச் சிறப்பிதழ் சிரிப்புக்கிடமானால் எங்களை விட மகிழ்ச்சி அடைபவர் யாருண்டு?

— ஆசிரியர்

மேலட்டை வண்ணப்படம்: உத்தரா

ஆனந்த
ஆனி 30

ஜூலை 14
1974

# கல்கி

## சிரிப்புச் சிறப்பிதழ்





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# தேநீரின் பல சுவைகளும் மிளிர்ந்து மணப்பது



**ஒரு கோப்பை லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீயிலே!**




**லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் மனதை மகிழ்விக்கும் தேநீர்**

LHGC-13 TAM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

மலர் 33 -- இதழ் 50

# காமராஜ் என்ன செய்யப் போகிறார்?

சுதந்திரம் பெறும் வரையில் மக்களின் நன்மதிப்புக்குப் பாத்திரமாகி மிகுந்த செல்வாக்குடன் விளங்கிய காங்கிரஸ், விடுதலைக்குப் பின் பதவிப் பித்தும், அதிகார மோகமும் லஞ்சஊழலும் மலிந்த கட்சியாக மாறி மக்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டது.

காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கு இவ்வாறு தாழத் தாழக் காமராஜரின் செல்வாக்கு உயர்ந்து கொண்டே போயிற்று! கதர்ச் சட்டையைப் பார்த்தாலே கேலி செய்தவர்கள் காமராஜரை மதித்துப் போற்றினார்கள். காந்திக் குல்லாய் கிண்டலுக்கு ஆளான போதும் வாழ்நாளெல்லாம் தூய்மையையும் எளிமையையும் கடைப்பிடித்து வந்துள்ள காமராஜரை வணங்கி வாழ்த்தினார்கள். சேற்றில் மலர்ந்த தாமரையானார் அவர்.

காங்கிரஸ் பிளவுபட்ட போதிலும் கூட இன்றளவும் அந்தக் கட்சியிடம் மாறாத விசுவாசம் பூண்டுள்ள காமராஜரது வாழ்க்கை அப்பழுக்கற்றதாக விளங்குகிறது. அதனாலேயே அவர் வெறுந் தலைவராக இல்லாது பெருந்தலைவராகத் தமிழ் மக்களுக்கு விளங்குகிறார்.

இத்தகைய பெருந்தலைவர் முன் அவரது பிறந்த நாளின் போது ஒரு பெரிய கேள்விக் குறி நிற்கிறது. 'என்ன செய்யப் போகிறார் காமராஜ்?' என்பது தான் அது.

என்ன செய்யப் போகிறாரோ அது அவருக்கும் ஆண்டவனுக்கும்தான் தெரியும். ஆனால் அவர் என்ன செய்ய வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கிறோம்? அதைக் கூறலாம்.

தமிழகத்தைப் பொறுத்த மட்டில் இந்திரா காங்கிரஸுடன் தேர்தல் உடன்படிக்கை செய்து கொள்வதும், அகில இந்திய ரீதியில் எதிர்க் கட்சியாக விளங்குவதும் மக்களுக்குப் புரியாத முரண்பாடுகளை உடையது. இதைத் தவிர்த்தே ஆகவேண்டும்.

இதை விட்டால் இரண்டே விதமான சிந்தனைகள் எழுகின்றன. ஒன்று அவர் இந்திரா காங்கிரஸுடனேயே சேர்ந்து விடுவது; மற்றது ஸ்தாபன காங்கிரஸை அகில இந்திய ரீதியில் பலப்படுத்துவது.

இந்திரா காங்கிரஸில் அவர் சேர்ந்து விடக் கூடாதே என்பதற்காகக் கவலைப் பட்டுப் பலர் தூது வருகிறார்கள். இவர்களது போக்கு கட்சிக் கண்ணோட்டத்தில் அமைந்துள்ளதே தவிர தேசத்தின் நலனை உத்தேசித்து இவர்கள் செயல் படுவதாகத் தோன்றவில்லை.

நாட்டு நலனை நோக்கினால் காமராஜர் இன்று இந்திரா காந்தியின் கரங்களைப் பலப்படுத்த வேண்டியவராகிறார். பிரிவினைச் சக்திகள் ஒருபுறம், பொருளாதார நெருக்கடி மறுபுறம், தார்மிகச் சீர்குலைவு இன்னொருபுறம் என்று நாட்டைப் பல நோய்கள் பீடித்துள்ளன. விலைவாசி உயர்வு, உற்பத்திச் சுணக்கம், பற்றாக்குறை, பண வீக்கம் என்று மக்களைப் பீடித்துள்ள துன்பங்கள் ஏராளம், ஏராளம்!

இந்நிலையில் இந்திராவுக்குப் பாரதம் முழுவதும் உள்ள செல்வாக்குடன் பெருந் தலைவர் காமராஜரின் அகில இந்தியச் செல்வாக்கும் இணையுமானால் அற்புதங்களைச் சாதிக்க முடியும்.

இந்திரா காந்திக்குப் பக்கபலமாக நிற்பதுடன், அவர் மேலும் மேலும் இடதுசாரியினரின் வலையில் சிக்கிக் கொள்ளாமல் காமராஜர் காக்க முடியும். நடுநிலைப் பாதைக்குப் பிரதமரைத் திருப்ப முடியும். மக்களின் உழைப்பாற்றலை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளவும், உற்பத்தியைப் பெருக்கவும், பண வீக்கத்தைக் கட்டுப் படுத்தவும், விலைவாசிகளைக் குறைக்கவும் நல்ல யோசனைகளைக் கூறி நடவடிக்கைகளையும் மேற்கொள்ள முடியும். பிரிவினைச் சக்திகள் வாலைச் சுருட்டிக் கொள்ளும். தேச மக்களுக்கு இந்த இணைப்பும் நட்பும் புதிய உற்சாகத்தையும் உத்வேகத்தையும் அளிக்கும்.

சோர்வு நீங்கிப் பாரதம் சிலிர்த்தெழுந்து சிங்கநாதம் செய்ய வேண்டும். காமராஜர் அதற்கு உதவட்டும்!

# வல்லரசுகளுக்கு வழிகாட்டுவோம்!

அழிக்கும் ஆற்றலை வல்லரசுகள் அற்புதமான முறையில் வளர்த்து வைத்திருக்கின்றன! ஒருசில பித்தான்களை அழுத்தினால் போதும் உலகமே சர்வ நாசமடைந்துவிடும்! அணுகுண்டுகளை ஏந்திக் கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஏவுகணைகள் மட்டுமின்றி விண்வெளியில் உலகைச் சுற்றி வரும் ஒரு செயற்கைச் சந்திரனிலிருந்து ஒரே சமயத்தில் புறப்பட்டுப் பல இலக்குகள் நோக்கி இறங்கும் ஏவுகணைகளை வேறு தயாரித்துள்ளன. புல் பூண்டு இல்லாமல் தாவர வர்க்கத்தையே அழித்து விடக்கூடிய ரசாயன விஷ குண்டுகளை உருவாக்கியுள்ளன.

இந்த அரக்கத்தனமான ஆயுதங்களையெல்லாம் ஒழித்துவிட வேண்டும் என்ற அடிப்படையான நல்லெண்ணத்தில்தான் பிரஷ்நேவும் நிக்சனும் உச்ச கட்ட மகாநாடு நடத்தினார்கள். ஆனால் உலகம் எதிர்பார்த்த அளவு சந்திப்பு பலன் தரவில்லை. காரணம் பரஸ்பரம் உள்ள சந்தேகங்களும் பீதியும் தான். ஏய்க்கப்பட்டு விடுவோமோ என்ற கவலைதான்.



நூற்றிஐம்பது கிலோ டன்களுக்கு அதிகமான அளவில் பூமிக்கடியில் அணு ஆயுதங்களைச் சோதனை செய்வதில்லை என்று இப்போது ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறார்கள் ருஷ்ய அமெரிக்கத் தலைவர்கள்.

இதை இந்தியாவுக்கு வெற்றி என்று சில மேதாவிகள் கூறி மகிழ்கிறார்கள். அதாவது அமைதிப் பணிக்கு அணு வெடிச் சோதனை நடத்துவதில் தவறில்லை என்பதை ருஷ்யாவும் அமெரிக்காவும் இந்த ஒப்பந்தத்தின் மூலம் ஒப்புக் கொண்டிருக்கின்றனவாம்! இது இந்தியாவுக்கு வெற்றியோ இல்லையோ உலக அமைதியை விரும்பும் நன்மக்களுக்குத் தோல்விதான். 150 கிலோ டன் அளவில் அணு வெடிச் சோதனை நடத்தக்கூடிய நாடு அணு குண்டுகள் தயாரிக்கும் ஆற்றலையும் பெற்றதாகத்தான் இருக்கும். எனவே, இவன் எங்கே ரகசியமாய் அணுகுண்டு தயாரித்து விடுவானோ என்ற பயத்தில் எதிராளியும் அணு வெடிச் சோதனைகளை நிகழ்த்துவான். இப்படியே அணுகுண்டு தயாரிக்கும் ஆற்றல் உலகில் பரவிக் கொண்டே போகும். இது எவ்வளவு ஆபத்தானது!.



உலக சமாதானத்துக்கும் மக்களின் ஆரோக்கியத்துக்கும் உகந்த ஒரே வழி எந்த விதமான அணு வெடிச் சோதனையையும் எந்த நாடும் நிகழ்த்தக் கூடாது. எந்த விதமான அணு ஆயுதத்தையும் உருவாக்கக் கூடாது என்று சர்வதேச ஒப்பந்தம் செய்து கொள்வதுதான்.

இதற்கு ஓர் ஆரம்பம் என்ற அளவிலே பிரஷ்நேவ் — நிக்ஸன் உச்ச கட்ட மகாநாட்டில் கையெழுத்தான ஒப்பந்தத்தை வரவேற்கலாம்.

வல்லரசுகளின் ஆயுதக் குறைப்பு முயற்சிகள் ஒருபுறமிருக்க இந்தியா போன்ற நாடுகள் தாமாகவே அணு வெடிச் சோதனைகளை நடத்தும் உரிமையை விட்டுக் கொடுத்தும் துறந்தும் வழிகாட்ட வேண்டும். அப்போது வல்லரசுகளின் ஆயுதக் குறைப்பு முயற்சிக்கு நாம் தார்மீக பலம் அளித்தவர்களாவோம். சந்தேகங்களை ஒழித்துக்கட்டி பரஸ்பர நம்பிக்கையின் அடிப்படையில் லோக க்ஷேமத்துக்கு உகந்த காரியத்தைச் செய்யலாம் என்று அறிவுறுத்தியவர்கள் ஆவோம்.

## கண்ணீர் வடிக்கிறார்கள்!

கச்சத் தீவு விஷயத்தில் 'கருணாநிதி ஏமாந்து விட்டார்' என்கிறார் எம். ஜி. ஆர். 'இந்திரா என்னைக் கலந்தாலோசிக்கவில்லை' என்கிறார் முதல்வர். 'இது ஒன்று போதும், மாநில சுயாட்சி எவ்வளவு அவசியம் என்பதற்கு' என்றுகூடச் சொல்லக்கூடும் முதல்வர்.

ஜனநடமாட்டம் ஏதுமற்ற இந்தத் தீவை இலங்கைக்கு நாம் பரிசாக அளித்து விட்டதாகவே இருக்கட்டும். அதை விடப் பல மடங்கு மதிப்புள்ள நல்லெண்ணத்தையும் நட்புறவையும் நாம் சம்பாதித்துக் கொண்டிருக்கிறோமே!

எல்லைப் பிரச்னை தீர்க்கப்பட்ட அதே சமயம் நமது மீனவர்களின் உரிமைகளுக்கும் கப்பல் போக்குவரத்துக்கும் எந்த விதமான இடைஞ்சலும் ஏற்படாதென்று ஒப்பந்தம் உறுதி அளிக்கிறது. அங்கு க்ஷேத்ராடனம் செய்யவோ, திருவிழாக்களில் கலந்துகொள்ளவோ தடையில்லை. சுற்றுப்புறத்தில் கடல் ஆழத்தில் உள்ள கனிப் பொருட்களைப் பயன்படுத்துவதிலும் திருப்திகரமான உடன்பாடு காணப்படுகிறது. இன்னும் என்ன வேண்டும்?

கண்ணீர் விடுவதைக் காட்டிலும் அண்டை நாட்டுடன் கைகுலுக்குவது முக்கியம்.

## சிக்கிம் சிக்கல் தீர்ந்தது!

தொடக்கத்தில் முரண்டு பண்ணின சிக்கிம் மன்னர் சோக்யால் பிறகு விட்டுக் கொடுத்து அந்நாட்டின் புதிய அரசியல் நிர்ணயச் சட்டம் நிறைவேற வழி வகுத்து விட்டார். சுபம்! சுபம்!

இம்மாதிரி பின்வாங்க வேண்டி நேரிடும் என்பதை அவர் முன்னமேயே உணர்ந்து கொண்டு தம் கௌரவத்தைக் காத்துக்


மன்னர் அதிகாரங்கள்
மக்கள் தீர்ப்பு
மன்னர் அதிகாரங்கள்
தலைக்கு வந்தது......


புது பொம்மை!


அன்று...
காஷ்மீர் பிரச்னை
இன்று...

கொண்டிருக்கலாம். போகட்டும், இப்போதாவது நல்ல காரியம் செய்தாரே என்று வாழ்த்துவோம்.

சிக்கிமில் முடியாட்சிக்குப் பதில் ஜனநாயகத்துக்கு வழி வகுப்பதாக மக்கள் கருத்துக்குச் செவி சாய்த்து ஒப்புக்கொண்ட பின் சிக்கிம் மன்னர் வேறு எந்த விதமாகவும் நடந்து கொண்டிருக்க முடியாது.

சிக்கல் ஏற்படக் காரணம் சிக்கிமில் உள்ள பெரும்பாலான மக்கள் நேபாளிகள் என்பதுதான். பூர்விகக் குடிகள் லெப்சாக்களும் பூடியாக்களும், மன்னர் சோக்யாலின் சிறுபான்மையினரைச் சேர்ந்தவர். புதிய அரசியல் சட்டம் நிறைவேறினால் தமது செல்வாக்குக்கும் சிறுபான்மையினர் நலனுக்கும் குந்தகம் ஏற்படுமோ என்று அவர் அஞ்சியிருக்கலாம்.

ஆயின் இதைக் கருத்தில் கொண்டே சட்டசபையில் பெரும்பான்மையினருக்குச் சமமான ஸ்தானங்கள் சிறுபான்மையினருக்கும் ஒதுக்கப்பட்டுள்ளன. அரசியல் சட்டம் இதற்கு வழி வகுக்கிறது.

இந்தச் சிறுபான்மையினரின் ஸ்தானங்களையும் சிக்கிம் காங்கிரஸ் கட்சியே கைப்பற்றியுள்ளது மன்னருக்குக் கவலையளித்திருக்கிறது. பெரிய நிலச்சுவான்தார்களாக வாழ்ந்து வரும் சில சிறுபான்மையினரின் எதிர்காலம் பாதிக்கப்படும் என்று அவர் கருதியிருக்கலாம். எனினும் சிக்கிம் காங்கிரஸில் சேர்ந்துள்ள சிறுபான்மையினர் தங்கள் சமூகத்தின் ஒட்டு மொத்தமான நலனுக்கு உகந்த வழியில் செயல்படுவர் என்றே எதிர்பார்க்கலாம்.

சிக்கிமின் பாதுகாப்பு, அயல்நாட்டு விவகாரம் ஆகியவை நமது பொறுப்பில் இருப்பதுடன், தொழில், வர்த்தக வளர்ச்சிக்குப் பெருமளவு உதவுவதாகவும் வாக்களித்துள்ளோம். மற்றபடி அதன் உள்நாட்டு விவகாரங்கள் அந்நாட்டின் பொறுப்பிலேயே உள்ளன.

எல்லைப்புறத்தில் உள்ள இந்த நாட்டின் மக்களுக்குச் சிறிதுகூட அதிருப்தி ஏற்படாத வகையில் பாரதம் நடந்து கொள்வது அவசியம். உதவ முயல்கிறார்கள் என்ற எண்ணம் ஆளப் பார்க்கிறார்கள் என்ற நினைப்பாக மாறிவிடாதிருக்க சர்வ ஜாக்கிரதையாக நமக்குள்ள அதிகாரங்களைப் பயன்படுத்த வேண்டும்.

## சிலம்புச் செல்வர்

திரு ம. பொ. சி.யின் அறுபத்தொன்பதாம் பிறந்த நாள் விழா பொது வாழ்வில் அவர் ஈடுபட்டதன் பொன் விழா.

இந்தப் பொன் விழா நியாயமாக அளித்திருக்க வேண்டிய மகிழ்ச்சி நமக்கு ஏற்படாததற்குக் காரணம் தேசிய பாரம்பரையில் வந்த அவர் இன்று தி. மு. க.வுடன் ஒட்டி உறவாடிக் கொண்டிருப்பதுதான்.

ஒரு வழியாக அவர் தி. மு. க.விலேயே சேர்ந்து விட்டால் கூட இத்தனை மனச் சங்கடம் நமக்கு ஏற்படாது. ஆனால் அக்கட்சிக்கு வெளியே இருந்து கொண்டே அவர்கள் செய்கிற காரியங்களுக்கெல்லாம் வக்காலத்து வாங்கிப் பேசுவதும் அவர்கள் செய்கிற தவறுகளை வன்மையாகக் கண்டிக்காமல் விடுவதும் திரு ம. பொ. சி.



யிடம் மதிப்புள்ளவர்களைக்கூடத் தர்மசங்கடத்துக்குள்ளாக்குகிறது.

அரசியல் ஒருபுறமிருக்க, பொன் விழாக் காலத்துக்குத் திரு ம.பொ.சி. ஆயிரக் கணக்கான பிரசங்க மேடைகளை அலங்கரித்திருக்கிறார். சிறைவாசங்கள் மேற்கொண்டிருக்கிறார். போராட்டங்கள் பல நிகழ்த்தியிருக்கிறார். இடையிடையே வயிற்று நோய் காரணமாக ஆஸ்பத்திரி வாசம் செய்த காலமும் உண்டு!

இவ்வளவுக்கும் இடையில் திரு ம.பொ.சி. எழுபத்தைந்து நூல்களை எழுதியுள்ளார் என்பது எவரையும் மலைக்க வைப்பதாகும். இவற்றில் அரசியலும் உண்டு. இலக்கியமும் உண்டு. வாழ்க்கை வரலாற்று நூல்களும் உண்டு. பிறந்த தின விழாவின்போதும் இவரது புதிய நூல்கள் சில வெளியிடப்பட்டன.

சிலம்புச் செல்வரின் இலக்கியப் பணிக்கும் இது பொன் விழா. பொன்னான பணி அது.

---

ராஜாஜி சிந்தனை

## ஆப்பரேஷன் பாக்கியம்

ராஜாஜியின் உவமைகளில் கருத்தும் இருக்கும் சிரிப்பும் இருக்கும். இடைக்கால சர்க்காரில் அவர் பதவி வகிக்கப் போவதைப் பாராட்டிச் சிலர் பேசினார்கள்.

ராஜாஜியின் பதில்: ''நீங்கள் எல்லாரும் என்னைப் பாராட்டிப் பேசுவது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது. இது எப்படி இருக்கிறதென்றால் ஆப்பரேஷன் செய்துகொள்ளப்போகும் ஒரு மனிதனைப் பார்த்து, 'அப்பா! நீ ரொம்ப அதிர்ஷ்டசாலி, பூர்வ ஜன்மத்தில் நீ பண்ணின புண்ணியத்தால்தான் உனக்கு ஆப்பரேஷன் செய்துகொள்ளும்படியான பாக்கியம் கிடைத்தது. உன் யோகமே யோகம்' என்று சொல்வது போலிருக்கிறது!''

பதவி வகிப்பது என்பது எவ்வளவு சிரமம், அதில் பெயரெடுத்து நல்லபடியாகத் திரும்பி வருவது எவ்வளவு கஷ்டம் என்பதை எத்தனை அழகாகக் கூறிவிட்டார் ராஜாஜி! இந்தக் கஷ்டமான காரியத்தை அவரை விடத் திறம்படச் செய்து வெற்றி கண்டவர்தான் யாருண்டு?

# எண்ணெகள் எல்லாமே எண்ணெகள் தாம்...

# ஆனால் ஸிங்கர்* ஆயில்

'மல்டி-ப்ரொடெக்டிவ்' ஆகும்.




நீங்கள்
ஒருமுறை உபயோகித்துப்
பார்த்தீர்களானால் ஸிங்கர்'
ஆயிலின் தனிச்சிறப்பு தெள்ளெனத்
தெரியவரும். இது 'மல்டி-ப்ரொடெக்டிவ்'
(பல்வேறு பாதுகாப்பு தரும்)
எண்ணெ. இது உங்கள் மெஷினுக்கு
எண்ணெப் பசை அளித்து, துருப்பிடிக்காமல்
காப்பதோடு, எல்லா உறுப்புகளும் நெடுங்
காலம் சீராக இயங்க உதவுகிறது.
எல்லா இயந்திரங்களின் உறுப்புகளையும் நன்கு
பராமரிக்க எப்பொழுதும் ஆல்-பர்ப்பஸ்
ஸிங்கர்' ஆயிலேயே உபயோகியுங்கள்.

இந்தியா முழுவதிலும் கிடைக்கிறது.

0.0852 லிட்டர் அளவுள்ள பாட்டில் ரூ 4.50

ஸிங்கர் அளிப்பவை சிறந்த பொருட்களே
சிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி,
207, டி. என். ரோடு, பம்பாய் 400 001

*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்.

SSM.16.TAM.

# பேபி ஃபுட் பற்றுக்குறை யிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்.**

குழந்தைக்கு மூன்று
மாதம் ஆனதும்,
உணவு தயாரிக்
கும் போது, பேபி ஃபுட்




ஒரு ஸ்பூனும், எளிதில்
ஜீரணமாகும் பாலமுல் ஒரு
ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத்
தொடங்குங்கள். பிறகு படிப்படி யாக
அதிகமாக்கி, பேபி ஃபுட் பாதியும்,
பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.

**ஸ்பூனுல் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன்
பாலமுல் கலந்து பசைபோல்
ஆக்குங்கள். சுவைக்கு
வேண்டிச சர்க்கரை சேருங்
கள். காலையில் பாட்டிலில்
கொடுப்பதற்குமுன்




இதை ஸ்பூனுல் ஊட்டுங்கள்.
படிப்படியாய், ஒரு நாளைக்கு 2, 3
தடவைகளாக பாலமுலை,
பழச்சாறு, பருப்பு, முட்டை,
இவைகளோடு கொடுத்து,
சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

*100 கிராம், அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.*

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம். |
| வைடமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைடமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைடமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைடமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைடமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நியாஸினமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைடமின C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்

**பாலுடன் கூடிய தானிய உணவு**
**ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே**

கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோஆபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.



# முத்துஸ்வாமி ஐயர் சிலை 'ஹாய்'யாக இருக்கலாமா?

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

'இந்த மடம், இத்தனை யானை, சேனை, பல்லக்கு, பரிவாரம் எல்லாவற்றையும் வைத்துக் கொண்டிருக்கிறோமே! இதையெல்லாம் விட்டுவிட்டுப் போய்விடலாமா?' என்று தோன்றிற்று. அப்புறம் நம் காரியம் என்ன என்று யோசித்துப் பார்த்தேன். ஆதி சங்கர பகவத்பாதர்களை ஜனங்களுக்கு ஞாபகப் படுத்துவதுதான் அது என்று தெரிந்தது. உருவச் சிலை வைத்து ஒருவரை ஞாபகப்படுத்துகிற மாதிரி, ஆதி ஆசார்யாளே தமக்கு ஞாபகார்த்தமாக அவர் பெயரை வைத்துக்கொண்டுள்ள எங்கள் பரம்பரையை இந்த மடங்களில் வைத்துவிட்டுப் போயிருக்கிறார். உருவச் சிலை என்றதும் ஹைகோர்ட்டில் இருக்கும் முத்துஸ்வாமி அய்யரின் சிலை நினைவுக்கு வந்தது. அந்தச் சிலையில் இருக்கிற முத்துஸ்வாமி அய்யர் ராப் பகல், வெயில், புழுக்கம் எப்போது பார்த்தாலும் நீள கவுன் போட்டுக் கொண்டும் டர்பன் கட்டிக் கொண்டும்தான் இருப்பார். ஆனால் நிஜ முத்துஸ்வாமி அய்யர் எப்போதுமே இப்படி கவுனும் டர்பனுமாகவா இருந்தார்? இல்லை. இவற்றை விட்டுவிட்டு அவர் வீட்டிலே ஹாய்யாகவும் இருந்தார். இருந்தாலும் அவருடைய ஸ்தானத்தின் பெருமையை ஞாபகப் படுத்த வேண்டிய சிலைக்கு அந்த 'ஹாய்' கூடாது. அது எப்போது பார்த்தாலும் இந்த 'அலங்காரத்'தோடுதான் இருக்க வேண்டும்.

ஆதி ஆசார்யாளின் ஞாபகார்த்தத்துக்கு அவரது மடாதிபத்தியத்தை நினைப்பூட்டுகிற எல்லா ஆடம்பரச் சின்னங்களும் எப்போதும் உடன் இருந்தால்தான், லோக ஜனங்களுக்கு அதில் ஓர் ஈடுபாடு உண்டாகும். மகா பெரியவரான அவருக்கு எப்போது பார்த்தாலும் இந்த ஆடம்பரச் சின்னங்கள் தேவையாக இல்லைதான். ஆனால் அவரது பெயரை மாத்திரம் ரக்ஷிக்க வந்திருக்கிற நமக்கு, ஒரு மடத்தைக் காட்டி அதன் மூலம் அவரை ஞாபகப்படுத்துகிற நமக்கு, இந்த யானை பல்லக்கு பரிவாரம் எல்லாம் இருக்கத்தான் வேண்டும் என்று தெளிந்தேன். இப்படியே இருக்கட்டும் என்று பல்லைக் கடித்துக் கொண்டு இருந்துவிட்டேன்.

(இது நாற்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முந்திய வாசகம். இப்போது அவர்கள் மடத்தையும் விட்டுவிட்டதிலிருந்து உருவச் சிலையாக இன்றி அசல் ஆதி ஆசார்யர்களாகவே ஆகிவிட்டார்கள் எனலாம்தானே?)

* * *

சந்தியாவந்தனங்களைத் தமிழில் காலைக் கடன், மாலைக் கடன் என்பார்கள். இப்படியே திவசத்தைப் பித்ரு கடன் என்பார்கள். 'கடன்' என்றால் வேண்டாவெறுப்பாகச் செய்கிற காரியமா? இல்லை. இதில் ஒரு பெரிய தத்துவம் இருக்கிறது. புதிதாக நமக்குப் பணம் காசு சேர்த்துக் கொள்ளாமல் நாம் தரித்திரப்பட்டு விட்டுப் போகலாம். அதற்காக நம்மை யாரும் சண்டை பிடிக்க மாட்டார்கள். ஆனால் ஏற்கனவே வாங்கியிருந்த கடனைத் திருப்பித் தராவிட்டால் கடன் கொடுத்தவன் சும்மா இருப்பானா? போலீஸ் வரைக்கும் விஷயங்கள் போய்விடும். ஏனைய பூஜை புரஸ்காரம், தான தர்மம் க்ஷேத்ராடனம் எல்லாம் நாமாக இஷ்டப்பட்டுச் சேர்த்துக் கொள்கிற புண்ணியச் செல்வம். இவற்றைச் சேகரிக்காவிட்டாலும் நமக்கு மட்டும்தான் நஷ்டம். ஆனால் சந்தியும் பித்ரு காரியமும் இப்படி இல்லை. மநுஷ்ய ஜன்மா எடுத்தபோதே லோக க்ஷேமத்துக்காகத் தேவர்களையும், மூதாதையரையும் உத்தேசித்து இந்த அநுஷ்டானங்களைச் செய்தே ஆக வேண்டும் என்று நாம் கடன்பட்டிருக்கிறோம். எனவே வேறு எந்தப் புண்ணிய காரியம் செய்தாலும் செய்யாவிட்டாலும், இவற்றை மட்டும் செய்ய முடியாது என்று சொல்ல நமக்கு வாய் இல்லை. கடன்பட்டிருக்கிறவன் திருப்பித் தர முடியாது என்று சொன்னால் தப்ப முடியுமா?

எங்கேயும் இருக்கிற ஸ்வாமிக்குக் கோயில் எதற்கு என்கிறார்கள். ஆனால் அவர் எங்கேயும் இருப்பதாக உணர்ந்தால் இத்தனை பொய் பித்தலாட்டங்கள் நாம் பண்ணுவோமா? ஏன், கோயிலிலேயேகூட அந்தக் கர்ப்பக் கிருஹத்துக்குள் மட்டும்தான் அவர் இருக்கிறார் என்று நினைப்பதால்தானே, அங்கே தந்த பிரசாதத்தைச் சாப்பிட்டுவிட்டுக் கையை வெளிப் பிராகாரத்துத் தூணிலேயே துடைத்து விடுகிறோம்? இந்தத் தூணில் ஸ்வாமி இருக்கிற பிரக்ஞை அப்போது நமக்கு இருக்கிறதா? ஆனபடியால், எங்கேயும் இருக்கிற ஸ்வாமியை எங்கேயாவது ஓரிடத்திலாவது இருப்பதாகப் பாவிப்பது தான் பக்திக்கு முதல் படி.

# நீங்கள் எம்பிராய்டரியினால் அனேகமாக எதையுமே அழகு மிளிரச்செய்யலாம்.

## கோட்ஸ் ஆங்கர் நூல்கள் உங்கள் எம்பிராய்டரியை பல வருடங்கள் பளிச்சென்றும் புதுமையுடனும் வைத்திருக்கும்!





மிகச் சிறந்த பருத்தியிலிருந்தே பெறக்கூடிய உறுதியும், பளபளப்பும் கொண்ட கோட்ஸ் ஆங்கர் எம்பிராய்டரி நூல்கள் மிகச் சிறந்த பயன்களைத் தருகின்றன. பல சலவைகளுக்குப் பிறகும் பளபளப்பும், பொலிவும் குன்றாத வகையில் கெட்டிச் சாயம் தோய்த்த அழகழகான பற்பல வகைகளிலிருந்து எவற்றையும் நீங்கள் தேர்ந்தெடுக்கலாம்.
கோட்ஸ் ஆங்கர் பலபயனுள்ளது. கை மற்றும் மெஷின் எம்பிராய்டரிக்கென தனித் தனியான விசேஷமான பற்பல வகை நூல்கள் உள்ளன. கோட்ஸ் ஆங்கர் பிரசுரங்களில் ஏராளமான பல டிசைன்கள் உள்ளன! நீங்களாகவே எம்பிராய்டரி செய்து



கொண்டாலும், எம்பிராய்டரி செய்த துணிகளை வாங்குவதானாலும் கோட்ஸ் ஆங்கர் நூல்களே வேண்டுமென்று கேளுங்கள்.

**ஆங்கர்**

எம்பிராய்டரி நூல்கள்

**கோட்ஸ்**

*சிறந்த நூல்களைத் தயாரிப்பவர்கள்*

Grant.22.TM

# சிரிப்பு இலக்கிய சிந்தனையாளர்!



[ஜார்ஜ் எஸ். காப்மான் அமெரிக்காவின் பிரசித்தி பெற்ற நாடகாசிரியர். முப்பத்தேழு வருடங்களில் நாற்பத்தைந்து நாடகங்கள் எழுதினார் இவர். அவற்றில் இருபத்தேழு நாடகங்கள் சக்கைப்போடு போட்டன. இவர் இதைத் தவிர செய்தித்தாள்களுடனும் வெவ்வேறு பதவிகளில் தொடர்பு கொண்டிருந்தார். முக்கியமாக, இவர் நகைச்சுவையாகப் பேசக்கூடியவர்; எழுதக் கூடியவர்.]

☐ இவர் எழுதிய நாடக விமரிசன வரிகள் சில :

'தியேட்டரின் பின்புறம் சிரிப்பொலி கேட்டது; ஒரு வேளை ஜோக்குகளை யெல்லாம் அங்கே சொல்லிக் கொண்டிருந்தார்களோ என்னவோ ?'

'நான் அந்த நாடகத்தை மிகவும் அசௌகரியமான நிலையில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தேன் — திரை தூக்கப்பட்டிருந்தது!'



சாதாரணமாக 'மோசமான நாடகம் நல்ல நடிப்பினால் காப்பாற்றப்பட்டது' என்று நாம் சொல்வது வழக்கம். ஆனால் காஃப்மான் அதை மாற்றி 'மோசமான நாடகம் மோசமான நடிப்பினால் காப்பாற்றப் பட்டது' என்று எழுதினார்.

☐ சுயமாகப் பணம் சம்பாதித்த கோடீசுவரர் ஒருவர், 'நான் இந்த உலகத்தில் பைசா இல்லாமல் பிறந்தேன்' என்று பெருமையடித்துக் கொண்டார். பதிலுக்கு காஃப்மான் 'நான் பிறக்கும் போது எனக்குப் பன்னிரண்டு டாலர் கடன் இருந்ததே' என்றார்.

☐ ஒரு நடிகை புதிய நாடகம் ஒன்றை வர்ணித்தாள்: 'இந்த நாடகத்தில் அரங்க நிர்மாணமே கிடையாது. முதல் காட்சியில் நான் மேடையின் இடது பக்கம் நிற்பேன். ஜனங்கள் நான் ஒரு ஹோட்டல் வாசலில் நிற்பதாக நினைத்துக்கொள்ள வேண்டும். இரண்டாவது காட்சியில் நான் மேடையின் வலது பக்கம் நிற்கும்போது ஜனங்கள் நான் ஒரு வீட்டில் இருப்பதாக நினைத்துக் கொள்ள வேண்டும்.'

காஃப்மான் சொன்னார்: 'இடைவேளைக்குப் பிறகும் ஜனங்கள் நாடகம் பார்த்துக் கொண்டிருப்பதாக நீ நினைத்துக் கொள்ள வேண்டியது தான்.'

☐ ஒரு முறை காஃப்மான் ஆஸ்பத்திரியில் படுத்திருந்தார். அப்பொழுது அவரைப் பார்க்க வந்த நண்பர் ஒருவர் அவரை உற்சாகப் படுத்துவதற்காக இன்னொரு நாடக டைரக்டரைப் பற்றிய வதந்தி ஒன்றைச் சொன்னார். அந்த நாடக டைரக்டர் தூய்மையானவர், சன்னியாசி எனப் பெயர் பெற்றவர். அவர் ஓர் இளம் நடிகையுடன் சுற்றுவதாக நண்பர் சொன்னார். காஃப்மான் உடனே 'யார் அந்த நடிகை?' என்று கேட்டார். 'தெரியாது' என்றார் நண்பர். 'கெட் அவுட்' என்று கத்தினார் காஃப்மான். நண்பர் ஒரு வதந்தியை இவரிடம் கூறியதற்காகக் கோபிக்கிறார் என்று எண்ணிச் சங்கடப் பட்டு வெளியேறத் தயாரானார். காஃப்மான் தொடர்ந்தார் : '' அந்த நடிகை யார் என்று தெரிந்து கொள்ளாமல் என்னைப் பார்க்க வராதே !''



☐ டொரதி பார்க்கர் என்ற பெண் எழுத்தாளர் காஃப்மானைப் பற்றி ஒரு முறை எழுதும்போது, 'திறமை குறைவு; பெருமை நிறைய' என்று குறிப்பிட்டார். பிறிதொரு சமயம் அவர் தற்கொலை முயற்சியில் தோல்வியுற்றுக் காயங்களோடு ஆஸ்பத்திரியில் படுத்திருந்தார். அப்பொழுது அவரைப் பார்க்கப் போன கர்ஃப்மான் 'டொரதி! அடுத்த தரம் ஜாக்கிரதையாய்த் தற்கொலை பண்ணிக் கொள்; காயத்தோடு நிறுத்திக் கொள்ளாதே' என்றார்.

☐ ஒரு முறை காஃப்மான் நாடகம் பார்த்துக் கொண்டிருந்த போது ஏழெட்டுப் பேர் சளசளவென்று பேசியபடியே அவருக்கு முன் வரிசையில்



வந்து உட்கார்ந்தார்கள். நாடகத்தைக் கவனிக்காமல் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். காப்மான் அவர்களைக் கூப்பிட்டுச் சொன்னார்: 'கொஞ்சம் உரக்கப் பேசினால் கேட்கலாம். இந்த நடிகர்கள் போடுகிற கூச்சலில் நீங்கள் பேசுவது என் காதில் விழவேயில்லை!'

இன்னொரு நாடகம் படு அறுவையா யிருந்தது. முன்னால் உட்கார்ந்திருந்த பெண்மணியைக் கூப்பிட்டு காஃப்மான் சொன்னார்: மேடம்; நீங்கள் ஏன் 'ஹாட்' அணிந்து கொண்டு நாடகம் பார்க்க மாட்டேன் என்கிறீர்கள்?

☐ காஃப்மானை அவர் குடும்ப டாக்டர் ஏகப்பட்ட பரிசோதனைகளுக்கு உள்ளாக்கினார். அதன் முடிவு சொல்ல ஒரு தேதி நிர்ணயித்தார். அன்றைக்கு காஃப்மான் அவர் எதிரில் போய் நின்றார்.

''ஜார்ஜ், உட்கார்'' என்றார் டாக்டர் நிதானமாக.

''ஜார்ஜ்! உன்னிடம் எப்படிச் சொல்வது என்றே தெரியவில்லை'' என்று மெதுவாக விஷயத்தை ஆரம்பித்தார். 'சரி, நாம் தீர்ந்தோம்' என்று காஃப்மான் கணக்குப் போட்டு விட்டார்.

''நான் என்ன சொல்வது, நிஜமாகவே புரியவில்லை'' என்றார் டாக்டர்.

காஃப்மானுக்கு மூச்சு நின்று விடும் போலாகி விட்டது.

''சரி, நேரடியாக விஷயத்தைச் சொல்லிவிட வேண்டியதுதான், வேறு வழியில்லை. எனக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது'' என்றார் டாக்டர்.

காஃப்மான் அதற்குப் பிறகு அந்த டாக்டரிடம் போவதே யில்லை.

☐ காஃப்மான் நாடகங்கள் மூலமே இலட்சக் கணக்கான டாலர் சம்பாதித்துக் கொண்டிருந்தபோது, ஹாலிவுட்டிலிருந்து பாரமவுண்ட் பிக்சர்ஸ் அதிபர் காஃப்மனின் நாடகம் ஒன்றைத் திரைப் படம் ஆக்கும் உரிமைக்கு முப்பதாயிரம் டாலர் தர முன்வந்தார். காஃப்மான் பதிலுக்குத் தாம் நாற்பதாயிரம் டாலருக்கு பாரமவுண்ட் பிக்சர்ஸையே வாங்கிக்கொள்ளத் தயாராயிருப்பதாக ஒரு தந்தி அடித்தார்!

☐ ''இன்றைக்கு யார் பிறந்த நாள் தெரியுமா?'' காஃப்மான் பக்கத்திலிருந்த நடிகையைக் கேட்டார்.

''உங்களுடையதா?'' என்றாள் அவள் பளிச்சென்று.

''இல்லை. ஆனால் கிட்டத்தட்ட என் அளவுக்கு முக்கியமான ஒருவர்தான். இன்றைக்கு ஷேக்ஸ்பியர் பிறந்த நாள்'' என்றார் காஃப்மான்.

—'ஐராவதம்'

# சிலேடைச் சிலம்பம்!





சிலேடை ஜோக்குகளைவிட சாமானிய ஜோக்குகள் இருக்க முடியாது என்பது நகைச்சுவை உலகின் தீர்ப்பு. ஆனால் மட்டமான ஹாஸ்யம் எப்படி இருக்கும் என்பது உங்களுக்குத் தெரிய வேணுமா? அதற்காகவாவது படித்து வையுங்களேன்!

☐ ''முப்பத்தாறு வருஷமா இதே இடத்திலே கிரஷ் வியாபாரம் பண்ணிக் கொண்டு வரேன் சார், நான்!''

''அப்படியா? உங்க பேர் என்னங்க?''

''பால**கிரஷ்ணன்**!''

☐ '' 'பேனாவுக்கு இங்க் போட்டுக் கொடுங்கள்' என்று கடைக்காரர்கிட்டே கொடுத்தேன்..... அவர் என்னடாவென்றால் என் சட்டையில் எல்லாம் இங்கைக் கொட்டி விட்டார்..... சே, சுத்த மோசமான ஆள்!''

''**இங்கிதம்** தெரியாத ஆள் என்று சொல்லுங்கள்!''





☐ விருந்தாளி — வீட்டுச் சொந்தக்காரரிடம்:

''எந்த வேலையைச் சொன்னாலும் முணுமுணுத்துக் கொண்டே செய்கிறானே உங்க வேலைக்காரன்..... அவன் பேர் என்ன சார்?''

''**முனு**சாமி!''

☐ (ஓர் அலுவலகத்தில்)

''அதோ, அந்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாரே, அவர் தான் எங்கள் சேர்மன்!''

''அவருக்குப் பக்கத்தில் சுவிசேரில் ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறாரே, அவர் யார்?''

''அவர் **சுவிசேர்மன்**!''

உங்களுக்குத் தோன்றிய சிலேடைச் சிலம்பத்தைக் கீழே எழுதிக் கொள்ளுங்கள். இது வரை படித்ததற்கு அது ஒன்றும் குறைந்து போய்விடாது!

— புஷ்பா

# எஸ்ட்ரெலா சக்தி




இந்த சக்தி
தரும் ஒலி
உங்கள்
காதுகளில்
ரீங்காரம்
செய்கிறது.

இந்த சக்தி
தரும் ஒளியை
நீங்கள்
கண்ணெதிரே
காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்!**

**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல! எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-400 019.

CMEB-2-203

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.




ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது, தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.



உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள். இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்



இலவசக் கைப் புத்தகத்திற்கு எழுதுக:

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு நவீனமான வசதிகள்
BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லி.

CHAITRA-BLS-19 TAM



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## ஐம்பத்தோராம் அத்தியாயம்

## சக்கரவர்த்தித் தூதன்

குமார சக்கரவர்த்தி சபையில் கூடி இருந்தவர்களை ஒரு தடவை கண்ணோட்டமாகப் பார்த்து விட்டு, ''உங்கள் அபிப்பிராயம் என்ன? எல்லாருக்கும் சம்மதந்தானே?'' என்று கேட்டார்.

சபையில் எல்லோருடைய முகத்திலும் திகைப்பின் அறிகுறி காணப்பட்டது. சற்று நேரம் நிசப்தம் குடி கொண்டிருந்தது.

உண்மை என்னவென்றால் அங்கே கூடியிருந்தவர் யாவரும் யுத்தம் சம்பந்தமாக அபிப்பிராயம் கூறுவதற்காக வரவில்லை. மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பத்தையும் ஆக்ஞையையும் தெரிந்து கொள்வதற்காகவே அவர்கள் வந்திருந்தார்கள்.

ஒன்பது மாதத்துக்கு முன்னால் சக்கரவர்த்தி வடக்குப் போர்க்களம் சென்ற போது அவர்கள் மேற்படி கொள்கையையே அநுஷ்டித்துச் சக்கரவர்த்திக்குச் சர்வாதிகாரம் அளித்தார்கள். இப்போதும் அதே உறுதியுடனே தான் சபை கூடியிருந்தார்கள்.

விஷயம் இப்படியிருக்க, மாமல்லர் திடீரென்று எதிர்பாராத விதமாக ஒரு பெரிய அபாயகரமான காரியத்தைச் செய்யப் போவதாகச் சொல்லி, அதைப் பற்றி அபிப்பிராயமும் கேட்கவே, எல்லோரும் மனக் குழப்பத்தில் ஆழ்ந்து இன்னது செய்வதென்று தெரியாமல் சும்மா இருக்கும்படி நேர்ந்தது.



மாமல்லர் எல்லோருடைய முகங்களையும் ஒரு தடவை கண்ணோட்டம் செலுத்திப் பார்த்துவிட்டு, ''ஏன் எல்லாரும் மறுமொழி சொல்லாதிருக்கிறீர்கள்? இது என்ன மௌனம்? உங்கள் முன்னிலையில் சொல்லத் தகாத வார்த்தை எதையேனும் சொல்லிவிட்டேனா? வீர பல்லவ குலத்துக்கு இழுக்குத்தரும் காரியம் எதையேனும் கூறினேனா?'' என்று கம்பீரமாகக் கேட்டார்.

இன்னமும் அச்சபையில் மௌனம் தான் குடிகொண்டிருந்தது. பெரியதொரு தர்ம சங்கடத்தில் தாங்கள் அகப்பட்டுக் கொண்டிருப்பதாக ஒவ்வொருவரும் உணர்ந்து வாய் திறவாமல் இருந்தார்கள்.

''நல்லது. உங்களில் ஒருவரும் ஆட்சேபியாத படியினால் என்னுடைய யோசனையை ஒப்புக்கொள்கிறீர்கள் என்று ஏற்படுகிறது. சேனாபதி! அப்படித்தானே?'' என்று மாமல்லர் சேனாபதி கலிப்பகையாரைக் குறிப்பாகப் பார்த்துக் கேட்டார்.

சேனாபதி கலிப்பகையார் எழுந்து, ''குமார சக்கரவர்த்தியின் கட்டளை எதுவோ; அதன்படி நடக்க நான் கடமைப்பட்டவன். ஆனால், அது யுக்தமானது என்று என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. மாமல்லர் கூறுவது சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறானது. எவ்வளவோ தீர்க்காலோசனையின் பேரில் பல்லவேந்திரர் நமது சைனியத்தைக் கோட்டைக்குள்ளே கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். மகேந்திர சக்கரவர்த்தி கோழை அல்ல. போருக்குப் பயந்தவர் அல்ல.



சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறாக நாம் எதுவும் செய்வது உசிதமல்ல!'' என்றார்.

குமார சக்கரவர்த்தியின் முகத்தில் ஆத்திரம் கொதித்தது.

''சேனாதிபதி! என்னுடைய வீரத் தந்தையைக் கோழையென்றோ பயந்தவர் என்றோ நான் சொன்னேனா? அதைக் காட்டிலும் என் நாவை அறுத்துக் கொள்வேன்! என் தந்தையின் யுத்த தந்திரம் வேறு; என்னுடைய யுத்த தந்திரம் வேறு. அவர் இல்லாத போது என்னுடைய யுத்த தந்திரத்தை அனுசரிக்க எனக்குப் பாத்தியதை உண்டு. சேனாதிபதி! பல்லவ சைனியம் நாளைச் சூரியோதயத்திற்குள் யுத்த சந்நத்தமாகக் கிளம்ப ஆயத்தம் செய்யுங்கள்!''

சேனாதிபதி கலிப்பகையார், சற்றுத் தணிந்த குரலில் ''பல்லவ குமாரரின் தந்திரம் யுத்த தந்திரம் அல்ல. தற்கொலைத்

தந்திரம்! வாதாபி சைனியத்தில் ஐந்து இலட்சம் போர்வீரர்கள் இருக்கிறார்கள். பல்லவ வீரர்கள் இலட்சம் பேருக்கு மேல் இல்லை'' என்றார்.

மாமல்லர் கண்களில் தீப்பொறி பறக்க விழித்துக் கூறினார்: ''சேனாதிபதி! புள்ளலூர்ப் போர்க்களத்தில் பல்லவ வீரர்கள் எத்தனை பேர், கங்கபாடி வீரர் எத்தனை பேர் என்பதை அறிவீரா? ஐம்பதினாயிரம் கங்க வீரர்களைப் புறங்காட்டி ஓடும்படி நம் பதினாயிரம் வீரர்கள் செய்யவில்லையா? போர்க்களத்திலே ஆட்களின் கணக்கா பெரிது? வெற்றியளிப்பது வீரமல்லவா? பல்லவ வீரன் ஒவ்வொருவனும் சளுக்க வீரர் ஒன்பது பேருக்கு ஈடாவான். கலிப்பகையாரே! இதைத் தாங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லையா?''

''வாதாபி சைனியத்தில் ஐந்து இலட்சம் வீரர்கள் மட்டுமில்லை; பதினையாயிரம் போர் யானைகள் இருக்கின்றன!'' என்றார் கலிப்பகை.

''இருந்தால் என்ன? நம் வீர தளபதி பரஞ்சோதியாரின் கை வேலுக்கு அஞ்சி மதம் பிடித்த யானை இந்தக் காஞ்சி நகரின் வீதிகளில் தறிகெட்டு ஓடியது நம் சேனாபதிக்குத் தெரியாது போல் இருக்கிறது. தளபதி பரஞ்சோதியைப் போன்ற ஓர் இலட்சம் வீர சிம்மங்கள் பல்லவ சைனியத்தில் இருக்கும்போது, புலிகேசியின் போர் யானைகளுக்கு நாம் ஏன் அஞ்ச வேண்டும்....?''

விவாதம் இவ்விதம் முற்றிக்கொண்டிருப்பதைக் கண்ட முதல் மந்திரி சாரங்க தேவர் பெரிதும் கவலையடைந்தார். பெரியவர் எழுந்து நின்றதும் மாமல்லர் பேச்சை நிறுத்தினார்.

''ஒரு விஷயம் நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். சக்கரவர்த்தி இன்னமும் வந்து சேர அவகாசம் இருக்கிறதல்லவா? இது விஷயம் கோட்டை வாசற் காவலர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறதா? சக்கரவர்த்தி இன்றிரவு ஒருவேளை வந்தால் கோட்டைக் கதவைத் தாமதமின்றித் திறந்து விடக் காவலர்கள் ஆயத்தமாயிருக்கிறார்களா?'' என்று முதன் மந்திரி வினவினார்.

அப்போது தளபதி பரஞ்சோதி, ''ஆம்; அப்படித்தான் கட்டளையிட்டிருக்கிறேன். சக்கரவர்த்தி பெருமான் ஒருவேளை தூதர்கள் மூலமாகச் செய்தி அனுப்பக்கூடுமென்று எதிர்பார்த்து, அதற்கும் தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்றார்.

தளபதி பரஞ்சோதி இவ்விதம் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே மண்டபத்தின் வாசற் காவலன் ஒருவன் விரைந்து உள்ளே வந்து, ''சக்கரவர்த்தியிடமிருந்து தூதன் ஓலை கொண்டு வந்திருக்கிறான். சிங்க இலச்சினையுடன் வந்திருக்கிறான்!'' என்று தெரிவித்தான்.

இதைக் கேட்ட மாமல்லர் திகைத்துப்போய் நின்றார். சபையில் இருந்த மற்றவர்கள் எல்லாரும் மிகவும் நெருக்கடியான சமயத்தில் தெய்வமே தங்களுடைய துணைக்கு வந்தது என்று எண்ணியவர்களாய் மனத்துக்குள் உற்சாகமடைந்தார்கள். (தொடரும்)

## வடமொழி ஹாஸ்யங்கள் !



பரம புனிதமான 'குமார சம்பவ' காவியத்தில் வருகிற ஒரு நகைச்சுவைக் கட்டம்.

அம்பாளின் பாதத்தில் செவ்வரக்குக் குழம்பு பூசிக் கொண்டே தோழி சொல்கிறாள்: '[illegible] நீ ஊடல் செய்தால் அவருக்குத் தாளாது. வந்து உன் காலில் விழுந்தான் செய்வார். அப்போது நீ உன் பாதத்தால் அவரது தலையை இடறிவிடலாம். அவரையா உதைக்கப் போகிறாய்? அந்தத் தலைமுடியில் வீற்றுள்ள சந்திரிகா தேவியைத் தானே உதைத்துப் பழி தீர்த்துக் கொள்வாய் ?'

இப்படிச் சொன்ன சேடியை அம்பிகை பொங்கு கோபத்தோடு மலர்ச் சரத்தால் அடித்தாளாம் !

• • •

காளிதாஸனை வைத்தே ஒரு நகைச்சுவைக் கவிதை. சம்ஸ்கிருதத்தில் மோதிர விரலுக்கு 'அநாமிகை' என்று பெயர். 'அநாமிகை' என்றால் 'பெயர் இல்லாதது' என்று பொருள். மோதிர விரலுக்கு ஏன் இப்படிப் பெயர் உண்டாயிற்று என்று தெரியவில்லை. காளிதாஸனின் காலத்துக்குப் பிறகு இதற்கு ஒரு காரணம் உண்டாகிவிட்டது என்கிறார் ஒரு கவி. அநாமிகை பற்றிக் கவிதை செய்த இவரும் ஓர் அநாமதேயக் கவிதாம். அவர் சொல்கிறார்: மகாகவிகள் இன்னின்னார் என்று கணக்கிடுவதற்காக ஒருவர் விரல்விட ஆரம்பித்தாராம். 'காளிதாஸன்' என்று முதலாவதாகச் சொல்லி மடக்கியிருந்த சுண்டு விரலை நீட்டினார். அடுத்தபடியாக மோதிர விரலுக்கு எந்தக் கவியைச் சொல்லலாம்? காளிதாஸனுக்கு அடுத்தபடி சொல்லும்படி இன்னொரு மகாகவி இருக்கிறாரா! இன்றளவும் இல்லவே இல்லை! எந்தப் பெயரும் அவருக்கு அகப்படவில்லை. அதனால் 'எந்தப் பெயருமில்லை -- அநாமிகை' என்று மோதிர விரலை நீட்டினார். அந்த விரலுக்கும் பெயர்ப் பொருத்தமும் ஏற்பட்டுவிட்டது !

-- கன்யா


இவளுக்குத் தெரியும்
குங்கும திலகங்களிலே
இணையிலா அழகு திலகம் சிங்கார்...
எங்கெங்கும் கிடைக்கும்
உங்களுக்குத் தெரியுமா—பாரத நாட்டின்
பேரழகு திலகமான சிங்கார் எந்த உடைக்கும்
உளவிலக்கும் பொருந்துமாறு சொக்குமழகுள்ள
பலவிதமான சாயல்களில் உருவாக்கப்படுகிறது.
மென்மைய மெருகுடனே, மின்னும் மெருகுடனே...
சிந்தூரப் பொடி உண்டு, சாந்தும் உண்டு.
Shingar
சிங்கார்— பாரத நாட்டின் உச்ச விற்பனையுடைய,
பரிபூரண நம்பிக்கைக்குரிய குங்குமப் பொட்டு.
தயாரிப்பாளர்கள்: பாரமவுண்ட் ப்ராடக்ட்ஸ், பம்பாய்-400 004.
விநியோகஸ்தர்கள்:- முல்லர் & ஃபிப்ஸ் (இந்தியா) லிட்.
Shingar
Shingar
DELUXE
Shingar

# ஹாஸ்டல் ஹாஸ்யம்



ஹாஸ்டல் வார்டன் காய்கறி வாங்குபவரிடம்: நல்ல வெஜிடேரியன் வெஜிடபிள்ஸாகப் பார்த்து வாங்கி வா.

காய்கறி வாங்குபவர்: ஒண்ணும் புரியல்லீங்க.

வார்டன்: புழுக்கள் இல்லாத காய்கறி என்று சொன்னேன்.

— சி. பி. மோகனசுந்தரம்



முதலாண்டு மட்டும் என்னுடன் படித்துத் தேறுமற்போன ஒரு நண்பன் தன் தந்தைக்குக் கடிதம் எழுதும்போது அவருக்குத் தெம்பூட்டுகிறபடி எழுதி விட்டு அதை இவ்வாறு முடித்தான்:

''ஆகவே, மனம் தளராமல் பணம் அனுப்பவும்.'' — ஆர். தீனதயாளன்



'' தயிர் ஏண்டா வெள்ளையாயிருக்கு?''

''அதைத் தோய்ச்சிருக்காண்டா.''

— வி. ராதாகிருஷ்ணன்



கல்லூரி விடுதியிலுள்ள குளியலறைகளுக்கு உள் தாழ்ப்பாள் இருக்காது என்பது மிகவும் சாதாரண விஷயம். அதனால் குளிக்க வரும் மாணவர்கள் டவலைக் கதவின் இடுக்கில் கொடுத்து மூடி விடுவார்கள். ஆகையால் கதவு மூடியது போல் இருக்கும். உள்ளே ஆள் இருப்பதும் தெரியவரும்.

கல்லூரி விடுதியில் புதிதாகச் சேர்ந்த புகுமுக வகுப்பு மாணவருக்கு இந்தக் குறுக்கு வழி புரியவில்லை. அதனால் ஒரு மேல் வகுப்பு மாணவரை அனுப்பி இம்முறையைக் கற்றுக் கொடுக்கச் சொன்னார். அந்த மாணவர் புது மாணவரைக் குளியலறைக்கு அழைத்துச் சென்று வெளியில் இருந்த வண்ணமே எப்படி டவலை வைப்பது என்று செய்து காண்பித்தார். அம்மாணவரும் சில நிமிடங்கள் யோசனை செய்துவிட்டு, ''துண்டு வைக்கும் முறை புரிந்து விட்டது. ஆனால் எப்படிக் குளியலறைக்கு உள்ளே மூடின கதவு மூலமாகச் செல்வது?'' என்று கேட்டாரே பார்க்கலாம்!

— டி. கணேசன்



அன்று இரவு வேளாண்மைக் கல்லூரி ஹாஸ்டலில் அறையின் முன் வராந்தாவில் கயிற்றுக் கட்டிலில் நன்கு குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார் பக்கத்து அறை நண்பர். எவ்வளவோ தட்டி எழுப்பியும் எழுந்திருக்கவில்லை. குறட்டை விட்டுத் தூங்குவதில் ஹாஸ்டலின் அவர்தான் மன்னன். அன்று நாங்கள் ஆறு பேர்கள் சேர்ந்து அவரைக் கட்டிலோடு மெதுவாகத் தூக்கி ஹாஸ்டலின் இரண்டாவது மாடிக்கு மேல் உள்ள மொட்டை மாடியில் கொண்டு வந்து வைத்தோம். மறுநாள் அதிகாலையில் நாங்கள் எல்லோரும் அங்கு சென்று குறட்டை மன்னர் துயில் எழும் காட்சியைக் கண்டு களித்தோம். தூக்கத்திலிருந்து எழுந்து எங்களைப் பார்த்த அவரது முகத்தில் அசடு வழிந்தது.

— உ.ரா.



ஒருமுறை எங்கள் கல்லூரி விடுதியில் (எஸ்.ஐ.ஈ.டி. ஹாஸ்டல்) விடுதி மாணவிகள் டைஃபாய்டு ஜுரத்தினால் பாதிக்கப்படாமல் இருப்பதற்குத் தடுப்பு ஊசி போட்டார்கள். அதற்கு நாங்கள் அனைவரும் வரிசையில் சென்று அங்கிருந்த ஆட்களில் ஒருவரிடம் எங்கள் பெயரையும் வயதையும் கூறிவிட்டு, மற்றவரிடம் சென்று ஊசி போட்டுக் கொண்டோம்.

என் தோழியும் என்னுடன் வந்திருந்தாள். அனைவரும் தங்கள் பெயருக்குப் பின் வயதைச் சொல்வதை அவள் தங்கள் அறை எண்களைத் தான் 19, 20, 21 என்று கூறுகிறார்கள் என நினைத்துத் தன் முறை வந்ததும் தன் பெயரைக் கூறிவிட்டு, '62' என்று தன் அறை எண்ணைக் கூறினாள். பெயரை எழுதுபவர் ஆச்சரியத்துடன் 'என்ன இந்தப் பெண்ணுக்கா' 62 வயது?' என்று எண்ணிச் சிரித்தார். அங்கிருந்த நாங்கள் அனைவரும் 'கொல்' என்று சிரித்து விட்டோம். அவர்கள் கூறுவது தங்கள் வயதைத்தான் என்று விளக்கிய பின்பு, தன் வயதைக் கூறிவிட்டு அவள் வந்தாள். இந்த நிகழ்ச்சியை எண்ணி நாங்கள் சிரிக்காத நாளே கிடையாது.

— ஜே. சரோஜினி

★ முதல் பரிசு ரூ. 50/- பெறும் துணுக்கு.



'ரோம் நகர் எப்பொழுது கட்டப்பட்டது?' என நண்பரிடம் கேட்டபோது அவர் 'ரோம் ஒரு நாள் இரவில் கட்டப்பட்டது' என்றார். 'இது எப்படி நீ அறிந்தாய்?' என்றேன். அவர் ''வகுப்பில் ஆங்கிலப் பேராசிரியர் Rome was not built in a day என்று கூறினாரல்லவா?'' என்றார்.

— உ. ராமநாதன்



என் ஹாஸ்டல் தோழன் ராமுவின் மாமா கிராமத்திலிருந்து சென்னைக்குத் திடீர் விஜயம் செய்தார். நான், நண்பன் ராமு, அவன் மாமா ஆகிய மூவரும் ஒரு நாள் மாலை 'வாக்கிங்' செல்லும்போது வழியிலிருந்த ஓட்டலைக் கண்டதும் அவர், ''வாங்க தம்பி, ஓட்டலுக்குப் போயி ஏதாவது சாப்பிடலாம்'' என்று எங்களை அழைத்தார். அச்சமயம் நானும் ராமுவும் எடையைக் குறைக்க 'டயட்'டிலிருந்ததால் ராமு அவரிடம் சொன்னான்: ''நாங்க ரெண்டு பேரும் 'டயட்'லே இருக்கோம் மாமா. நீங்க மட்டும் போய்ச் சாப்பிட்டு விட்டு வாங்க.''

வந்ததே கோபம் மாமாவுக்கு. ''ஏன்டாலே, நான் ஊருக்குப் புதுசுன்னு உனக்குத் தெரியுமில்லே? நீபாட்டுக்கு ''நாங்க 'டயட்'லே இருக்கோம்'' அப்படின்னு சொல்லிட்டுப் போயிட்டா எப்படி? 'டயட்'ங்கிற இடம் எங்கே இருக்குன்னு நான் என்ன கண்டேன்? அடையாளமாவது சொல்லிட்டுப் போ!'' என்று பொரிந்தார்.

ஹாஸ்டலுக்குத் திரும்பியவுடன் எல்லோருக்கும் நடந்ததைச் சொன்னோம். சிரிப்பு வெடித்தது. அங்கே.

— ஆர். ரகோத்தமன்



நாங்கள் சிலர் வெளியில் சென்று திரும்பி, விடுதியினுள் நுழைந்து அறைக்குச் செல்வதற்காக நடந்து கொண்டிருந்தோம். அப்போது திடீரென்று கரெண்ட் 'கட்' டாகிவிட்டது. நாங்கள் அங்கேயே சிறிது நேரம் நின்று விட்டோம். நன்றாக இருட்டி விட்ட நேரம். எங்கள் விடுதி மிகப் பெரியது. மைதானத்திலோ அதிகமாக யாரும் இடையாது. நாங்கள் மெதுவாக அறையை நோக்கி நடந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களுடன் வந்தவர்களில் ஒருத்தி பின்தங்கிவிட்டாள். நாங்கள் திரும்பிப் பார்த்தோம். யாருமே தெரியவில்லை. ஆனால் அவள் பேசும் குரல் மட்டும் கேட்டது. ''சாரி, ஸோ ஸாரி, தெரியாமல் மிதித்து விட்டேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்போது மின்விசை வந்தது. அந்தப் பெண்ணுக்கு அருகில் ஒரு நாய் நின்றுகொண்டிருந்தது. நாங்கள் பெரிதாகச் சிரித்துவிட்டோம். அப்போது அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமே! நல்ல வேடிக்கை. பின்னர்தான் அவள் சொன்னாள்: அங்கு இருந்தது ஒரு சீனியரோ என்று பயந்து அவள் திரும்பத் திரும்ப மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தாளாம். இதைச் சொல்லி அடிக்கடி நாங்கள் அவளைக் கிண்டல் செய்து சிரித்துக் கொண்டிருப்போம்.

- இ. மாலா



மணி எல்லோரிடமும் சரளமாகப் பேசுவான். நன்றாகவும் பேசுவான்.

அவனிடம் ஒரேயொரு கெட்ட குணம். அதாவது அவன் எதற்குமே தன் கைக்காக ஒரு பைசா செலவழிக்க மாட்டான். எல்லாமே ஓசிதான்.

தேவையானவற்றைத் தினம் ஒவ்வொருவரிடமாகப் பெற்று அந்த ரவுண்டு முடிந்ததும் மீண்டும் முதல் நண்பரிடம் ஆரம்பிப்பான். ஒரு நாள் கொஞ்சம் ஹேர் ஆயில் கொடேன் என்று நண்பன் ராமுவைக் கேட்டான். நண்பன் உடனே ''கையில் நானே ஊற்றிவிடுகிறேன்'' என்று அவன் கையில் ஊற்றினான், தாராளமாக. மணி எண்ணெயை நன்றாகத் தேய்த்துக் கொண்டான். பிறகு சீப்புக் கேட்டான்.

''இரு இரு தருகிறேன். சீப்பு முழுவதும் ஒரே அழுக்காக இருக்கிறது. நன்றாகக் கழுவித் தருகிறேன்'' என்று தண்ணீரில் நனைத்துக் கொடுத்தான்.

சீப்பை வாங்கிக் கண்ணாடி முன் நின்று தலையைச் சீவிக்கொண்ட மணி, ''என்னடா இது, இப்படி நுரை நுரையாக வருகிறது!'' என்று கேட்டு மீண்டும் குளிப்பதற்காக ஓடினான்.

பின்னே, ஷாம்புவை நிறையத் தலையில் தேய்த்துத் தண்ணீரைத் தெளித்து வாரினால் நுரை வராமல் என்ன செய்யும்? திட்டமிட்ட சதிதான் இது. மணி இம்மாதிரி எல்லோரிடமும் ஓசியிலேயே பெற்று வருவதைக் கண்டு ஹேர் ஆயில் பாட்டிலில் 'ஷாம்பு'வை ஊற்றி வைத்துக் கொடுத்திருக்கிறான் ராமு. அதன் பிறகு மணி ஓசி கேட்பதை விட்டு விட்டான். அவன் ஷாம்புவைத் தேய்த்துக் கொண்டு நீர் தெளித்துத் தலைவாரிக்கொண்ட கோலத்தை இப்போது நினைத்தாலும் சிரிப்பாய் வருகிறது.

— ''பாசமணியன்''



அப்போது நான் கோவையில் ஆர்தர் ஹோப் பாலிடெக்னிக்கில் பயிற்சி பெற்றுக் கொண்டு, காலஞ்சென்ற திரு ஜி. டி. நாயுடு அவர்கள் நடத்தி வந்த டி. எம். எம். ஹாஸ்டலில் தங்கி, சாப்பிட்டு வந்தேன்.

இந்தியச் சாப்பாட்டு வகைகளில் சத்துக் குறைவு என்று நாயுடு கருதியதால் ஒரு நாள் எங்கள் ஹாஸ்டல் 'மெனு'வில் கோதுமைக் கஞ்சி, கேப்பை அடை முதலியவை போடப்பட்டன. சாதம் மிகக் குறைவு. சாயங்காலக் காப்பிக்குப் பதிலாக வேகவைக்கப் பட்ட கொள்ளில் வெல்லம் சேர்த்த ஒருவித (பலகார) பானம் வழங்கப்பட்டது.

அன்று காலையிலும் மத்தியானமும் நாங்கள் செய்த கலாட்டாவைக் கேள்விப்பட்டு நாயுடு அவர்கள் சாயங்காலம் ஹாஸ்டலைப் பார்வையிட வந்தார். அவர் வந்ததுமே எல்லா மாணவர்களும் ஏகோபித்துக் குதிரைகளைப் போல் கனைத்து அவரை வரவேற்றோம். எங்கள் மத்தியில் வந்து நின்ற நாயுடு அவர்கள் கோயமுத்தூர் கொச்சைத் தமிழில் சொன்னார்: "நீங்கள் எல்லாரும் இதுபோல் கனைத்துக் கொண்டே இருந்தால் நாளை மத்தியானச் சாப்பாட்டில் சோறுக்குப் பதில் புல்லைத்தான் போடுவேன்!"

நாயுடு அவர்களின் பிடிவாத குணத்தை நன்கு உணர்ந்திருந்த நாங்கள் உடனே 'கப்சிப்' என்று அடங்கி விட்டோம்; புல்லை நினைத்துப் பார்த்த போது கொள்ளே தேவலை என்றாகி விட்டது எங்களுக்கு!

— ஜான் எஸ்ப். துரை



நானும் என் நண்பர்களும் பேசிக் கொண்டிருந்தோம். ஒரு நண்பர் திடீரென்று, "மகா அலெக்சாந்தர் ஏன் பின் வாங்கினார்?" என்ற கேள்வியைக் கேட்டார்.

"மகா அலெக்சாந்தரின் படைகள் களைப்படைந்தமையினாலும், படை வீரர்கள் காயமுற்று இறந்தமையினாலும்" என்று சிலர் விடை அளித்தனர். "அவர் யுத்தம் போதும் என்று நினைத்ததால்" என்றார் ஒரு நண்பர்.

"நீங்கள் கூறிய விடைகள் தவறு. அவர் கோட்டின் பொத்தான் அறுந்து கீழே விழுந்து விட்டபடியால் பின் (Pin) வாங்கினார்" என்று நண்பர் கூற அனைவரும் அந்த ஜோக்கை வெகுவாக ரசித்தோம்.

— ஆர். வி. ஸ்ரீநிவாசன்



ஹாஸ்டல் 'மெஸ்'ஸுக்குப் புது சர்வர் ஒருவர் நியமிக்கப்பட்டிருந்தார். அவசரத்துக்கேற்ப இயங்கும் சுறுசுறுப்பில்லை அவரிடம். இதை அவரே உணர்ந்தார் போலும். எங்களிடம் கேட்டார்: 'ஆம் ஐ ஸ்லோ?' (Am I slow?)

ஒரு குறும்புக்கார மாணவன் அவர் கேட்ட கேள்வியையே பதிலாக மாற்றிச் சொன்னான்: "ஆமை ஸ்லோ."

— ஆர். ரகோத்தமன்



ஹாஸ்டலில் உணவு அருந்தும் நேரம். பரீட்சை சமயம். சர்வர் சாம்பார் கொண்டு வந்து பரிமாறும் போது ஒருவர் சொன்னார்: "பரீட்சைக்குப் படித்துப் படித்து மூளை குழம்பாகி விட்டது". அதற்கு இரண்டாவது மாணவர், "மிகவும் ரசமாகப் பேசுகிறாயே?" என்றார். அதுசமயம் ரசம் வந்துகொண்டிருந்தது. "பரீட்சைக்கு நேரமாகி விட்டது. ஐ டூ நாட் வான்ட் எனி மோர் விட்ஸ்" என்றாரே பார்க்கலாம்மூன்றாமவர்.

அப்போது மோர் வரும் சமயம்!!! - கே. ஆர். பாலசுப்பிரமணியம்

அன்று வகுப்புக்கு என் நண்பர்களுடன் சென்று கொண்டிருந்தபொழுது என் நண்பன் ஸ்ரீநாத் என்பவனைப் பார்த்து "நீ ஏன் இன்னும் முடி வெட்டவில்லை?" என்று வினவினேன். "கையில் பணமில்லை" என்று சொன்னான். மற்றொரு நண்பன், "பணம் கொடுத்தால் வெட்டிக் கொள்வாயா?" என்று கேட்க அவனும் இவர்கள் எங்கே பணம் தரப்போகிறார்கள் என்று எண்ணி, "சரி" என்றான். ஆனால் குறும்புக்கார நண்பனோ வகுப்புக்குச் சென்று "ஸ்ரீநாத்துக்கு முடிவெட்டிக் கொள்ள நிதி தாருங்கள்" என்று ஒரு பேப்பரில் எழுதி வகுப்பு நடக்கும்பொழுதே நண்பர்கள் ஒவ்வொருவரிடமும் அனுப்ப, அவர்களும் மூனு பைசா, ஐந்து பைசா வென்று வழங்கினார்கள்.

மறு நாள் காலையில் நாங்கள் ஐந்துபேர் அவனை எழுப்பி, 'முடிவெட்டிக் கொள்ளக் கிளம்பு. நாங்கள் பணம் வசூலித்து வைத்திருக்கிறோம்' என்று மாணவ, மாணவியர்கள் கையெழுத்து இட்டுக் கொடுத்த பேப்பரையும் பணத்தையும் காட்டித் தரதரவென்று அவனை இழுத்துக் கொண்டு ஹாஸ்டலை ஒட்டியிருந்த சலூனுக்குச் சென்றோம். "அடிக்கடி உனக்கு முடி வெட்டப் பணம் தர முடியாது" என்று கூறி மெஷின் போட்டு ஒட்ட வெட்டச் சொன்னோம். [பளபள வென்று பின் மண்டை தெரிய, சிறிது முன் மண்டை மயிருடன் அவனை அறைக்கு அனுப்பி வைத்தோம். பின் மண்டையில் சிறிது மயிர் வளரும் வரையில் வகுப்புக்கு அவன் வரவேயில்லை!

இப்பொழுது முடி வெட்டப் பணம் இல்லை என்று அவன் சொல்வதுமில்லை.

— சி. கல்யாணசுந்தரம்



ஸ்ரீமதி பானுமதி ராமகிருஷ்ணா தாம் எழுதியுள்ள நகைச்சுவைக் கதைகளுள் சிறந்த ஒன்றெனக் கருதும் இதனைக் கல்கி சிரிப்புச் சிறப்பிதழுக்குப் பிரத்தியேகமாகத் தேர்ந்தெடுத்துத் தந்துள்ளார்.



# சக்ரபாணியின் இந்திரலோக யாத்திரை!

பானுமதி ராமகிருஷ்ணா—

இந்திர லோகம். தேவேந்திரனின் அரண்மனை. தேவேந்திரன் கோபத்தோடு நெடு மூச்சு விட்டுக் கொண்டு மேலும் கீழும் உலவிக் கொண்டிருந்தான்.

அரம்பை கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு கவலையோடு நாற்காலியின் மேல் சாய்ந்து கொண்டு நின்றாள்.

''நாராயண! நாராயண!'' என்று நாரதர் உள்ளே நுழைந்தார்.

''என்ன விஷயம்? இந்திரா? அரம்பையோடு என்ன கோபப்படுகிறாய்? என்ன நேர்ந்தது ரம்பா?'' என்று நாரதர் கேட்டார்.

இந்திரன் சிறிது அமைதியுற்று. ''இவள் மண்ணுலகத்திலிருந்து திரும்பிவந்ததிலிருந்து மீண்டும் அங்கேயே போக வேண்டும் என்று சொல்கிறாள்'' என்றான்.

''நாராயண! இவ்வளவு தூரம் வளர்ந்து விட்டதா? நான் அப்போதே சொன்னேனே, இந்த பாவிடர்கள் எம காதகர்கள்! அதிலும் அந்தச் சினிமாக்காரர்கள் இருக்கிறார்களே, மிகப் பொல்லாதவர்கள். ஆனால் அரம்பை எதற்கு மீண்டும் போக வேண்டும் என்கிறாள்?''

''எதற்கா? என் விரோதி சக்கரபாணி எடுக்கும் படத்தில் நடிப்பதற்காம்.''

''நாராயண! வாஸ்தவம்தான். பாவம், பாதிப் படத்தில் நாம் இருவரும் சென்று அரம்பையை அழைத்து வந்து விட்டோமல்லவா? ஆனாலும் இப்போது மீண்டும் அங்கு போவதால் பயனென்ன? அரம்பைக்குப் பதில் வேறு யாரையோ போட்டுப்



படத்தை முடித்து விட்டாற் போல் தெரி கிறதே!'' என்றார் நாரதர்.

''ஹா! உண்மையாகவா? அட! என் தலை விதியே! நான் எவ்வளவோ ஆசைப்பட்டேனே! எவ்வளவோ கஷ்டப்பட்டு நடித்தேனே! உங்களால் எனது வாழ்க்கை ஆரம்பத்திலேயே முடிந்து விட்டது. இனி நான் உயிர் வாழ்ந்து ஒரு பயனும் இல்லை. நான் தற்கொலை செய்து கொள்கிறேன். இனி நான் உயிர் வாழ மாட்டேன்'' என்று சொல்லி, அரம்பை விக்கி விக்கி அழுதாள்.

இந்திரன் மிகவும் துயரப்பட்டு ''நாரதரே! இனி என்ன செய்வது? அரம்பைக்குப் பிடித்துள்ள சினிமாப் பைத்தியம் எப்படித் தெளியும்?'' என்று கேட்டான்.

''நீ ஒரு பிக்சர் எடுத்தால் தானே தெளிகிறது!'' என்றார் நாரதர்.

''பிக்சரா? அப்படி யென்றால்?''

''இது என்ன புரியவில்லையா? அந்த மனிதர்கள் எப்படிச் சினிமாப் படம் எடுக்கிறார்களோ அப்படி இந்திர லோகத்திலும் நீ ஒரு ஸ்டுடியோ கட்ட ஏற்பாடு செய்.''

''ஸ்டுடியோவை நான் கட்டுவதா? என்ன இது நாரதரே, நீர் சொல்வது? அது எப்படி நம்மால் முடியும்?''

''அந்த விவரங்களை யெல்லாம் சக்கரபாணியைக் கேட்டுத் தெரிந்து கொண்டால் போயிற்று! இக்கணமே அந்தச் சக்கரபாணியை இங்கே வரவழைத்து விடு'' என்றார் நாரதர்.

தூங்கிக் கொண்டிருந்த சக்கரபாணி விழிப்பு வந்ததும் கண்களைத் திறக்காமலேயே கட்டிலுக்குப் பக்கத்தில் 'டீப்பாய்' இருக்கிற நினைப்பில் சிகரெட் டப்பாவுக்காகக் கையை நீட்டித் துழாவினார். கைக்குப் பழவகை தட்டுப்பட்டன. திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தார். எதிரில் பெரு வெளிச்சத்திடையே இந்திரன் காணப்பட்டான். அவ்வளவு வெளிச்சத்தைப் பார்க்க மாட்டாமல் ஒரு கையினால் கண்களை மறைத்துக்கொண்டு, சலிப்புடன் ''யார் நீ?'' என்று கேட்டார்.

''நான் இந்திரன். தாங்கள் இருப்பது இந்திரலோகம்...''

''அப்படியா என்னை எதற்காக இங்கே வரவழைத்தாய்? உண்மையில் நீ இந்திரனா? அல்லது இந்திரன் வேஷம் போட்டவனா?''

''இந்திரன் வேஷமல்ல. நான் தேவேந்திரன்'' என்றான்.

''அது என்ன ''தேவ'' இந்திரன்? சும்மா இந்திரன் என்று சொன்னாலே போதும்... அது சரி, என் சிகரெட் டப்பா எங்கே?''

''இதோ இருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டு ஒரு சேவகன் மாயத்தால் வரவழைத்த சிகரெட்டப்பாவைக் கொடுத்தான்.

''நெருப்புப் பெட்டி எங்கே?''

''நீங்கள் பிடியுங்கள். என் சக்தியினால் உங்கள் சிகரெட் தானாகவே தீப்பற்றிக்கொள்ளும்'' என்றான் இந்திரன்.

''ஒரு தீக்குச்சியினால் ஆகிற காரியத்துக்கு உன் சக்தி எதற்கு? தீக்குச்சியைக் கிழித்து சிகரெட் பிடிக்கவில்லை யென்றால் சிகரெட் பிடித்ததாகவே இருக்காது. அதனால் நெருப்புப் பெட்டியை வரவழை!''

''சித்தம்!''

அடுத்த கணம் ஒரு சேவகன் சக்கரபாணியிடம் ஒரு நெருப்புப் பெட்டியைக் கொடுத்தான். சக்கரபாணி சிகரெட் பற்ற வைத்துக் கொண்டே, ''ஆமாம் ரம்பை எங்கே? அவள் சௌக்கியமாய் இருக்கிறாளா?'' என்று கேட்டார். அரம்பை ஒரு தூணின் மறைவிலிருந்து ஓடிவந்து சக்கரபாணியின் கால்களில் அழுது கொண்டே விழுந்தாள்.

''இதென்ன, சினிமாவில் வரும் காட்சி போல... எழுந்திரு! எழுந்திரு! சௌக்கியமாய் இருக்கிறாயா? பதிவிரதை வேஷம் வேண்டும் என்று ரொம்பவும் ஆசைப்பட்டுக் கேட்டாய். ஆனால் பாதியிலேயே மாயமாய் மறைந்துவிட்டாயே!'' என்றார் சக்கரபாணி.

அரம்பை எழுந்து நின்று, ''அதற்குத்தான் உங்கள் மன்னிப்பைக் கோருகிறேன்... என் தவறு ஒன்றும் இல்லை, சக்கண்ணா! தவறெல்லாம் அவர்களது!'' என்று இந்திரனைச் சுட்டிக் காட்டினாள். இந்திரன் சொல்ல மாட்டாத கோபத்தை அடக்கிக்கொண்டு தலை குனிந்தான்.

''அது சரி, அதற்கு நீ அழுவானேன்? படத்தின் பாதியில் நீ போய் விட்டதற்கு

---

★ மனிதன் தன் வாழ்நாளில் இரு சந்தர்ப்பங்களில் சூதாடக் கூடாது. ஒன்று, அவனிடம் அதற்கு வசதியாகப் பணம் இல்லாத போது; இரண்டு, அவனிடம் நல்ல பண வசதியிருக்கும்போது. — மார்க் ட்வெயின்

★ ட்ரைடன் தமது மனைவியின் கல்லறைக்கு இப்படி ஒரு கவி எழுதினார்:

இங்கே என் மனைவி ஆத்ம சாந்தி துய்க்கிறாள்; எனவே நானும்கூடத்தான்!

★ ''ஜார்ஜ் எலியட்'' என்ற ஆண் புனைபெயரில் எழுதிய பெண்மணி மேரி சொல்கிறார்: ''பெண்கள் முட்டாள்களாகத்தான் இருக்கிறார்கள் என்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் என்ன செய்யலாம்? ஆண்டவன் ஆணுக்கு சரி ஜோடாக இருக்க வேண்டும் என்றே அல்லவோ பெண்ணினத்தைப் படைத்து விட்டான்?''

— ரா. கு.





புரொட்யூஸர் அழ வேண்டுமே தவிர நீ எதற்கு அழுகிறாய்?'' என்றார் சக்கரபாணி.

**பா**ரிஜாத வனத்தில் இந்திரன், அரம்பை, சக்கரபாணி மூவரும் அமர்ந்திருந்தார்கள். சேவகர்கள் நவரத்தினங்கள் பதித்த கோப்பைகளில் அமிர்தத்தை நிரப்பிக் கொண்டு வந்து அவர்களின் முன்னே வைத்தார்கள். அதைப் பார்த்தவுடனேயே சக்கரபாணி, ''இதென்ன கண்ணறாவி! இதை எவன் குடிப்பான்? இது எனக்கு வேண்டாம். 'ஸ்காட்ச் விஸ்கி' இருந்தால் கொடு'' என்று சொன்னார். அடுத்த கணம் 'ஸ்காட்ச் விஸ்கி' பாட்டில் சக்கரபாணியின் முன்னிருக்கும் மேஜை மீது காணப்பட்டது.

''என்னை எதற்காக இங்கே அழைத்து வந்தீர்கள்? சொல்லவே இல்லையே!'' என்றார் சக்கரபாணி.

''உங்களால் எங்களுக்கு ஒரு பெரிய காரியம் ஆகவேண்டியிருக்கிறது. அதற்காகவே அழைத்து வந்திருக்கிறோம், சக்கண்ணா!'' என்றாள் அரம்பை. ''சிறிதுகாலம் இங்கே இருந்து எனக்காகப் படம் எடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். எது வேண்டுமானாலும் கண நேரத்தில் ஏற்பாடு செய்யக்கூடிய இந்திர லோகம் இது.''

''உன்னைப் போன்றவர்கள் படங்கள், ஸ்டுடியோக்கள் என்று ஆரம்பித்தால் கலை கொலையானாற்போல்தான்.... அரசாங்கத்தார் படம் எடுத்தாற்போல்தான் இருக்கும்'' என்றார் சக்கரபாணி, இந்திரனைப் பார்த்து.

இந்திரன் என்ன சமாதானம் சொல்வது என்று தெரியாமல் அரம்பையின் பக்கம் பார்த்தான். ''இந்த விஷயத்தில் இந்திரன் தலையிடமாட்டார். நாம் சொல்வது போல் கேட்பார். எல்லா ஏற்பாடுகளும் நீங்களே செய்யுங்கள், சக்கண்ணா!'' என்றாள் அரம்பை.

''என்ன பெரிய பிடுங்கலாகப் போய் விட்டதே! இப்பொழுது உடனே படம் எடுப்பதற்கு இங்கே என்ன இருக்கிறது...? ஸ்டுடியோ இல்லையென்றாலும் பரவாயில்லை. அவுட்டோரிலேயே எடுத்துவிடலாம். முதலில் கதை எங்கே?''

''நீங்களே சொல்லுங்கள், சக்கண்ணா! எந்தக் கதை நன்றாக இருக்கும்?'' என்று சொல்லி உற்சாகமாக முன்னுக்கு நகர்ந்து அவர் எதிரில் உட்கார்ந்தாள் ரம்பை.

''நன்றாயிருக்கிறது! எங்களுக்கே நல்ல கதை கிடைக்காமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். உங்களுக்கு நானென்ன கதை சொல்வது? நீங்களே சொல்லுங்கள்.''

''ப[illegible]ஸ்பதியை எழுதச் சொல்லலாமா?'' என்றாள் அரம்பை.

''என்னத்தை? உன் ஜாதகத்தையா?.... நமக்கு சினிமாக் கதை வேண்டும். அந்தக் கிழவன் என்ன சினிமாக் கதை எழுதுவான்? அவர் எழுதினால் அவரைப் போன்றவர்கள்தான் பார்க்க வேண்டும்.''

இந்திரன் சிறிது தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, ''பாருங்கள், சக்கரபாணியாரே! பூலோகத்தில் கத்திச் சண்டைகள் நடனங்கள் இருக்கும் படங்களையே எடுப்பதாக அரம்பை சொன்னாள். ஆனால் இங்கு நமக்கு அரம்பையைத் தவிர ஊர்வசி, மேனகை, திலோத்தமை முதலிய எத்தனையோ நாட்டியக்காரிகள் இருக்கிறார்கள்'' என்றான்.

''இருந்து என்ன பயன்? யார் பார்க்கிறார்கள் அவர்களை, உன்னைத் தவிர? எந்த நாளைய மேனகை! எந்த நாளைய திலோத்தமை! உன்னிடம் பென்ஷன் வாங்கிக் கொண்டு வாழும் அந்தக் கிழவிகளைக் கொண்டு என்ன படம் எடுக்க முடியும்? ஏதாகிலும் சென்டிமென்ட் கதையில் இருக்க வேண்டும். ஏதாகிலும் பெரியோரின் கதை எடுத்தால் நன்றாயிருக்கும்.....''

''பெரியோரின் கதை என்றால்....?'' என்று இந்திரன் வாக்கியத்தை முடிக்கும் முன்பாகவே, ''உன்னைச் சொல்லவில்லை; ஏதாகிலும் சிறந்த குணமுள்ள இராட்சதனின் கதையை எடுத்தால் நன்றாயிருக்கும்'' என்றார் சக்ரபாணி.

இந்திரன் கோபத்தாலும் அவமானத்தாலும் உள்ளுக்குள் புழுங்கிக் கொண்டிருந்தான். அரம்பை கொஞ்சம் கலவரமடைந்து, ''அதல்ல, சக்கண்ணா! சிறந்த குணங்கள் ராட்சசர்களிடம் எப்படி இருக்க முடியும்? தேவர்களிடம்தான் இருக்கும்'' என்றாள்.

''நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். சிறந்த குணங்கள் உள்ள ராட்சசர்கள் இல்லையா? சொல்லச் சொல்லுகிறாயா? பலியை எடுத்துக் கொள். மஹாபலி எப்படிப் பட்டவன்? அவனுடைய கால் நகத்துக்கு ஈடாவானா உங்கள் இந்திரன்? அவன் தன்னைக் காட்டிலும் சிறந்தவனாகிறான் என்று தெரிந்தவுடன் அவனைப் பாதாளத்துக்கு அனுப்பும் வரையில் இவன் — உங்கள் இந்திரன் - தூங்கவில்லை. பலியைப் பாதாளத்துக்கு மிதித்து அனுப்பினாலும் அவனுடைய கீர்த்தி வானுலகை எட்டியது. இன்று பலி சிறந்த கொடை வள்ளல் என்று சொல்லுகிறார்களே தவிர இந்திரன் பேச்சை யார் எடுக்கிறார்கள்?'' என்றார் சக்கரபாணி.

அரம்பை இந்திரனின் முகத்தைப் பார்த்தாள். இந்திரன் உள்ளுக்குள் கோபத்தினால் அக்னி குண்டமாக எரிந்து கொண்டிருந்தான். அரம்பை தரையைப் பார்த்துக் கொண்டே ''ஆனால் பலிச் சக்கரவர்த்தியின் கதைக்கு, வசனம் பாட்டு இவையெல்லாம் வேண்டுமல்லவா, இவற்றை எழுதுபவர்கள்...'' என்று இழுத்தாள்.

''அங்கிருந்துதான் வரவேண்டும். அது மட்டுமல்ல. இன்னும் எவ்வளவோ பேர் வரவேண்டும். டெக்னிஷியன், பின்னணிச் சங்கீதக்காரர்கள், காமிரா, சௌண்டு மெஷின்கள், மின்சார விளக்குகள், பின்னணி பாடகர்கள், மற்றுமுள்ள ஆர்டிஸ்டுகள் எல்லாரும் அங்கிருந்து வரவேண்டியதுதான். இங்குள்ளவர்கள் எதற்கும் பயன்படமாட்டார்கள்'' என்றார் சக்கரபாணி.

''ஏன், அப்படிச் சொல்லுகிறீர்கள் சக்கண்ணா? இங்கேகூட எத்தனையோ கலைஞர்கள் இருக்கிறார்கள்!'' என்றாள் அரம்பை சிறிது ரோஷத்தோடு.

''இருக்கலாம். ஆனால் எங்கள் 'தேட்டி விட்டி' அவர்களுக்கு வராதே! மதறாஸில் ஆர்டிஸ்டுகள் இருந்தும் பம்பாயிலிருந்து வர வேண்டும் என்கிறார்கள், மதறாஸில் இந்திப்

படங்கள் எடுக்கும் பம்பாய்க்காரர்கள். அவரவர் பாஷை அவரவருக்குச் சிறந்தது. அரம்பையைத் தவிர மற்ற அனைவரும் மண்ணுலகத்திலிருந்து வர வேண்டியதுதான்'' என்று சக்கரபாணி சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஐந்து கந்தர்வர்கள் ஆர்க்லைட்களைப் போல் கண்களை வைத்துக் கொண்டு அங்கே வந்து இந்திரனின் காதுகளில் ஏதோ சொன்னார்கள்.

உடனே இந்திரன் எழுந்திருந்து கோபாவேசத்தோடு, ''அடேடே, நான் எப்படிப்பட்ட மடையன்! மூளையில்லாமல் இந்த அரம்பைக்காக என் புத்தியை இழந்துவிட்டேனே! அஞ்ஞானத்தில் விழுந்து எல்லாம் மறந்து போய், என் இந்திர தத்துவத்தையே இழக்கும் நிலைக்கு வந்துவிட்டேனே. இந்த விபரீதங்கள் எல்லாம் இந்த அரம்பையால்தான் வந்தது'' என்று பேசிக் கொண்டிருக்கச் சக்கரபாணியார் நிதானமாக மீதியிருந்த விஸ்கிப் பாட்டிலைக் காலி செய்தார்.

அரம்பை கடகட வென்று நடுங்கிக் கொண்டிருந்தாள். அவளுக்கு இந்திரன் ஏதாகிலும் சாபம் கொடுத்து விடுவானோ என்கிற பயம்.

''தேவேந்திரா! அது மட்டுமல்ல; இந்த மாயக்காரர் மண்ணுலக மக்கள் எல்லாரையும் இங்கே வரவழைத்துவிடுவார். பிறகு நமக்கு இடம் இராது. மனிதர்களென்றும் வானர ஜாதி. இந்திர லோகத்தை நாசம் செய்துவிடுவார்கள். இவரை இந்தக் கணமே அனுப்பி விடுங்கள்'' என்று கந்தர்வர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, ''இதோ, இக்கணமே'' என்று கூறி இந்திரன் நாற்காலியில் ஆணவத்தோடு அமர்ந்திருந்த சக்கரபாணியைக் கையைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளினான்.

தமது அறையில் தூங்கிக் கொண்டிருந்த சக்கரபாணி கட்டிலில் இருந்து கீழே விழுந்து மெள்ள எழுந்து உட்கார்ந்தார்.

* * *

**வ**ழக்கப்படி ''யுவா'' பத்திரிகையின் தீபாவளி இதழுக்காகக் கதை கேட்டு டெலிபோன் செய்தார் அதன் ஆசிரியர். ''நேரில் வந்து கேட்க வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் கால் சுளுக்கிக் கொண்டு நடக்க முடியாமல் இருக்கிறேன்'' என்று கூறினார்.

''பாத்ரூமில் சறுக்கி விழுந்தீர்களா?'' என்று கேட்டேன்.

''ஐயே! அதல்ல, தூக்கத்தில் கட்டிலில் இருந்து யாரோ தள்ளிவிட்டாற்போல் கீழே விழுந்தேன். இம்மாதிரி இதற்குமுன் நேர்ந்தது இல்லை'' என்றார் சிரித்துக் கொண்டே. எனக்கும் சிரிப்பு வந்தது. சக்கரபாணியின் விரோதி ஒரு வேளை அம்மாதிரி தள்ளிவிட்டு இருக்கலாம் என்று எண்ணிக் கொண்டேன்.

வட்ட மேஜை

# யாரை நம்புவது ?

**அ**ந்நியச் செலாவணி ஈட்டுத் தரக்கூடிய சிமெண்ட் உற்பத்தி நிலக்கரிப் பற்றாக்குறையினால் பாதிக்கப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் சரக்கு வண்டிகளின் பற்றாக்குறையா அல்லது நிலக்கரி பற்றாக்குறையா என்பது திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஆனால் ரயில்வே வேலைநிறுத்தத்துக்கு முன்னால், தொழில் மந்திரி திரு சி. சுப்பிரமணியம், சரக்கு வண்டிகளின் (Wagon Shortage) பற்றாக்குறையினால்தான் சிமெண்ட் ஆலைகளுக்கு வேண்டிய நிலக்கரி அனுப்ப முடியவில்லை, என்றார். அதை மறுத்த ரயில்வே அமைச்சராக இருந்த ஸ்ரீ டி. ஏ. பை நிலக்கரிப் பற்றாக்குறையினால்தான் சிமெண்ட் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்றும் சரக்கு வண்டிகளின் பற்றாக்குறையினால் அல்லவென்றும் கூறியிருக்கிறார். இதில் யார் கூற்றை நம்புவது?

1973ம் வருடத்துக்கு முன்னால் நிலக்கரி பற்றாக்குறையோ அல்லது சரக்கு வண்டிகளின் பற்றாக்குறையோ இருந்தது கிடையாது. நிலக்கரிச் சுரங்கங்களையும், கோக் (Coke) சுரங்கங்களையும் தேசியமயமாக்கிய பின்னர் தான் சிமெண்ட் ஆலைகளுக்கு வேண்டிய நிலக்கரிக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது. இதற்குச் சரக்கு வண்டிகளின் பற்றாக்குறை தான் காரணம் என்றால், நிலக்கரியைக் கடல் மார்க்கமாவும் மத்திய அரசு சிமெண்ட் ஆலைகளின் அருகில் உள்ள துறைமுகங்களுக்கு அனுப்பலாமே.

தற்சமயம் ரயில்வே வேலை நிறுத்தம் முடிந்த பிறகும், தென்னகத்தில் உள்ள சிமெண்ட் ஆலைகள் Partial lay offல் நடக்கின்றன. இதனால் சுமார் 15000 தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்நிலை தொடர்ந்து நீடித்தால், Full lay off கொடுக்கப்பட்டாலும் ஆச்சரியமில்லை. லேஆஃபினால் பாதிக்கப்பட்ட ஊழியர்களில் நானும் ஒருவன்.

திருநெல்வேலி — 1
6—6—74 எம். பாலசுப்பிரமணியன்

**வா**ஷிங்டன் திருமணத்தை சாவி இங்கிருந்தபடியேதான் எழுதினார். ஆனால் அதற்கு முன்னால் 'சாவி' நவகாளி யாத்திரை செய்ததும் பின்னர் ருஷ்யாவுக்கும் இதர கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் சென்றதும் மறந்து விட்டதா?



கற்பனை நண்பர் கோபால் ராவுடன் அவர் நடத்திய உரையாடல்கள் பயண இலக்கியத்தில் புதுமை. நகைச்சுவை ததும்ப எழுதும் சாவி அவர்களின் புகைப்படத்தைச் சுற்றுலா சிறப்பிதழில் ஏன் பிரசுரிக்கவில்லை?

சென்னை — 30
28—6—74 சிவப்பிரகாசம்

(சிரிப்புச் சிறப்பிதழுக்காகக் காத்திருந்தோம்! - ஆசிரியர்

காலை ஏழு மணி இருக்கும். வாசலில் 'டிணிங் டிணிங்' என்று மணி ஓசை கேட்டது.

''உங்களைப் பார்க்கணும்னு யாரோ வந்திருக்காங்க'' என்றாள் மனைவி.

பனியன்கூட இல்லாமல் குளியல் அறைக்கு ஓடிக் கொண்டிருந்த நான் கேட்டேன்: ''ஆசாமி எப்படி இருக்கான்?''

''யாரோ பெரிய மனுஷா வீட்டுப் பிள்ளை மாதிரி......''

அவசரம் அவசரமாகச் சட்டையை மாட்டித் தலையைச் சரிப்படுத்திக் கொண்டு கூடத்துக்கு விரைந்தேன்.

''வாங்க... வாங்க....''

என் 'வாங்க'வுக்குக் காத்திராமலே வந்திருந்த இளைஞன் நாற்காலியில் கால் மேல் கால் போட்டு அமர்ந்து சிகெரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தான்.

சங்க காலத்து ராஜகுமாரன் ஸ்டைலில் கத்திரிக்கப்பட்ட தலையலங்காரம், தாடை எலும்புகளைத் தொடுகின்ற நீளமான கிருதா, தொங்கு மீசை, உடம்போடு ஒட்டிய பூப்போட்ட ஜிப்பா, தொள தொளவென்று பளபளக்கும் பெல்பாட்டம்!

''என்னு ஸாரு, அப்பிடி முழிக்கிறே....''

''அட, சிங்காரம்....!''

சிங்காரம் கலகலவென்று நகைத்தான்.

''பழைய சிங்காரம் இல்லே ஸாரு, இது முனிகபூரு!''

''முனிகபூரா !''

''ஆமா, சும்மா சுத்தமான தமிழ்லே இஷ்டைலா பேரை மாத்திக்கினேன். இனிமே நீகூட என்னை முனிகபூர்னுதான் கூப்பிடணும் !''

''என்னப்பா, என்ன சமாசாரம்?''

''இப்ப விசயம் என்னான்னு, நாங்க 'முனிகபூர் நாடக மன்றம்'னு ஒண்ணு 'ஒப்பன்' பண்ணப் போறோம். அதுக்கு நீதான் தலைவருன்னு நாங்களே தீர்மானிச்சுட்டோம்.''

நான் சங்கடம் கலந்த மகிழ்ச்சியோடு தலையைச் சொறிந்தேன்.

''இன்னா யோசனை பண்ணறே ? கவிட்டிக்கலாம்னு பார்க்கறயா?''

இந்த நேரம் பார்த்து வாசலில் இரைச்சல் கேட்டது.

''பாவி, பாவி, அல்லாப் பணத்தையும் கொள்ளை அடிச்சுக்கினு இங்கே வந்து குந்தியிருக்கானே, அட சிங்காரம் நீ நல்லா யிருப்பியா....?''

சிங்காரத்தின் தாயார் ஒப்பாரி வைத்துப் புலம்பிக் கொண்டே உள்ளே வந்தாள்.

'' வருசக் கணக்கா உண்டிப் பொட்டிலே சேர்த்து வைச்சிருந்த அத்தினி பணத்தையும் எடுத்துக்கினு... மூஞ்சைப் பாரு !.... சாமி துட்டுலே இந்த வேசம் போட்டுங் இறயே.... வெளங்குவியா !''

முனிகபூரின் தொங்கு மீசை அசைந்தது.

''ஏய் கெய்வி, சும்மா கலாட்டா பண்ணாதே, நான் துட்டை எடுத்ததை நீ கண்



ணுலே பார்த்தியா ? இத பாரு, ஸார், சமீல் (சமையல்) 'ரூம்பு' மாடத்துலே கல்லு வச்சுப் பூசி, சின்னதா ஓட்டை போட்டு, தெனம் தெனம் இது நாலஞ்சு எட்டஞ்சு போட்டு வந்திருக்குது.... எந்தக் கேப்மாறியோ செவுத்துக்குப் பின்னுண்டைப் பக்கமா கன்னம் வச்சு அத்தெ லவுட்டிக்கினு பூட்டான்னு அதுக்கு 'நானு 'ரெஸ்பான்ஸ்'? நீயே 'ரீஜண்டா' சமாளிச்சு இத்தெ வீட்டுக்கு அனுப்பு. நான் அப்பாலே வந்து கண்டுக்கறேன்.''

கழற்றிய 'விக்'கை மீண்டும் தலையில் மாட்டி, ஒரே தாவலில் வாசலுக்குப் பாய்ந்து ரிக்‌ஷாவில் ஆரோகணித்து மின்னலென மறைந்தான் அந்த அரசிளங் குமரன்.

கிழவி 'லோ லோ' என்று அடித்துக் கொண்டாள். 'ரீஜண்டாக' சமாளிக்கலானேன்.

''ஏம்மா, பையனுக்கு ஒரு கால் கட்டுப் போட்டு வைச்சுட்டா இப்படி நடந்துக்குவானு ?''

''ஐயோ! அந்த வவுத்தெரிச்சலே ஏன் கேக்கறீங்க, ஊர்லே என் தம்பி மக முத்தழகு பச்சைக் கிளியாட்டம் இவனுக்காவே வளந்துக்கினு இருக்குது. அத்தெக் கட்டிக்கடா பாவின்னு அடிச்சுக்கறேன், கேட்டாதானே? 'கட்டினு சினிமா ஸ்டாரு. இல்லாகாட்டி சுடுகாடு'ன்னு வசனம் பேசறானுங்களே...''

அவளுக்கு மோர் கொடுத்துக் குளிர வைத்து ஒரு வழியாக அனுப்பி வைத்தேன்.

சிங்காரம், 'அப்பால் வந்து கண்டுக்கிறேன்' என்று சொல்லிவிட்டுப் போனானே ? என்னை விசாரம் பிடித்துக் கொண்டது.

அவன் என்னைக் கண்டுக்காமல் இருக்க என்ன வழி.....?

'ஆபீஸ் முதலாளி அமெரிக்கா போகிறான். அத்தனை தொல்லையும் என் தலையில். இந்த நேரம் பார்த்து ஆடிட்டும் 'ஸ்டாக் செக்கிங்'கும்... எனக்கு மூச்சுத் திணறுகிறது.... நாலைந்து நாளைக்கு நான் ஆபீசுக்கு எப்போது கிளம்புவேன், எப்போது திரும்புவேன் என்று எனக்கே தெரியாது' என்று மனைவியிடம் 'சத்யமேவ ஜயதே' பாடினேன்.

'ரூட்'டை மாற்றிக் கொண்டு சந்துபொந்தெல்லாம் உலா வந்து — ஜம்மென்று ஹோட்டலில் காப்பி சாப்பாடு... சாயந்திரம் சினிமா.... இரவு பதினொரு மணிக்கு மேல் பதுங்கிப் பதுங்கி வீடு....

இத்தனை உஷாராக இருந்தும் மூன்றும் நாள் எக்கச் சக்கமாக மாட்டிக் கொண்டேன்.

**அ**ன்று பிற்பகல் இரண்டு மணி......

ஃபைல் கட்டைத் தூக்கிக் கொண்டு அதிகாரியின் அறைக்குள் நுழைந்த என்னை ஒரு முரட்டுக் கரம் பிடித்து நிறுத்தியது.

கோ...பா....லு! சிங்காரத்தின் அதாவது முனிசுபூரின் உற்ற நண்பன்.

காதருகே கிண்டலாகக் கேட்டான் அவன். ''என்னு வாத்யாரே, மூணு நாளா, தபாய்ஞ்சுகினே வரே?'' பின்னர் தொடர்ந்தான்: ''பயப்படாதே, உன் சம்சாரத்துக்கு உடம்பு நல்லாயில்லென்னு உன்னைக் கூட்டிக்கினு போக வந்திருக்கிறதா ஆபீஸர்

பட்டாஸ்






கையிலே 'டூப்' வுட்டிருக்கேன்.... ஜல்தியா கௌம்பு.... தலை போற காரியம்.''

வர முடியாதென்றால் பாவி ஆபீஸையே கலக்கிவிடுவான்.... என்ன செய்வதென்று நான் சங்கடப்படப் போக, செக்ஷன் மானேஜர் என்னைப் பரிவோடு கூப்பிட்டார்.

''கவலைப்படாதேப்பா, 'டெலிவரி டைம்'னு அப்படித்தான் இருக்கும். சீக்கிரமாப் போய்க் கவனி.''

வெளியே காத்திருந்த கோபாலு விஷமமாகச் சிரித்தான். எனக்கு அவனை உதைக்க வேண்டும் போல் இருந்தது. மனம் வரவில்லையே.....!

என் கையில் ஒரு நோட்டீஸைத் திணித்தான் அவன்.

காத்தாயி அம்மன் கோயில் ரிக்ஷா ஸ்டாண்டில்

**முனிகபூர் நாடக மன்றம் அளிக்கும்**

**'மைனாக்குஞ்சு'**

கதை, வசனம், பாடல், டைரக்ஷன்

**கவிஞர் 'கூளி'**

இந்தக் கூளி யாரென்று தெரியாமலேயே நான் பொக்கென்று சிரித்து, ''கூளி...ஹி... ஹி.... கூளி' என்று அரற்றவும்,

''புதுமையா இருக்கணும்னுதான் அந்தப் பேரை வச்சுக்கிட்டேன் ஸார்.... நல்லா இல்லே ?'' என்றான் கோபாலு.

நான், ''பலே, பலே!'' என்றேன்.

நாடகத் திடலை நோக்கி நடை போட்டுக் கொண்டே ஒரு பரபரப்பான திட்டத்தை இரகசியமாக வெளியிட்டார் 'கூளி'.

'மைனாக் குஞ்சு'வை அவர்கள் திரைப்படமாக எடுக்கப் போகிறார்கள். முனிகபூர்—ஹீரோ. சினிமா நடிகை மோகினிதான் ஹீரோயின்.... மைனாக்குஞ்சு. நாடகத்தில் ஏற்கும் பங்கைப் படத்திலும் ஏற்பார் கவிஞர். மிச்சம் மீதியெல்லாம் அதாவது மானேஜ்மெண்டிலிருந்து சில்லறை வேஷம் வரை எனக்குத்தான்.

'சினிமாவில் நான்' என்றதும் எனக்கு உச்சியில் ஐஸ் வைத்தது போல் இருந்தது.

'' ஏன் கோபாலு, இதற்குப் பணம்....?''

''இப்ப நாடகம் நடத்தறதே, அதுக்குத் தானே.....!''

கவிஞர் கூளி தமது ஈடு இணையற்ற பிளானை அவிழ்த்து உதறலானார்.

''காத்தாயி அம்மன் கோயிலுக்கு எதிரே தான் மோகினியின் பங்களா.... பங்களா மாடியிலிருந்து மோகினி நாடகத்தை ரசிக்கப் போகிறா. 'ஸப்ஜெக்ட்'டும் ஹீரோவும் அவளுக்குப் பிடிக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு....''

''பிடிக்கணுமே ?''

''அதெல்லாம் நம்ப ராணி கவனிச்சுக்கும் !''

''அது யார் ராணி ?''

ராணி முனிகபூரின் நெருக்கமான 'தோஸ்த்'. அழகான பெண்.... மோகினி வீட்டில் வேலை செய்யும் அவள் அந்த நடிகையின் 'செட்ரி' (செக்ரடரி) மாதிரி. மோகினிக்கு ஊறுகாய், முறுக்கு, சீடை இத்தியாதிகளெல்லாம் பிடிக்கும் என்று சொன்னதே அவள்தான்.

''முனிகபூரும் மோஹினியும் நெருக்கமா சேந்து இருக்காப்பலே — அதாவது கதாநாயகன் கதாநாயகியை ஆபத்திலேயிருந்து காப்பாத்தி, தூக்கிக்கிட்டு வராப்பலே — ஒரு பிளாஷ் போட்டோ. அந்தப் பிளாஷ் — போட்டோவையும் இந்தக் கதையையும் பிச்சாண்டி பிக்சர்ஸ் முதலாளி பார்த்துட்டார்னு உடனே ஷூட்டிங்தான்! இன்னெண்ணையும் ரகசியமாப் போட்டு வச்சக்குங்க.... படம் முடிஞ்சதுமே நம்ப முனிகபூருக்கும் மோஹினிக்கும் கல்யாணம்... முனிகபூர் சம்மதிச்சுட்டாரு.''

''பிரமாதம், பிரமாதம்'' என்று நான் பாராட்டுவதற்கும் நாடக அரங்கம் நெருங்குவதற்கும் சரியாக இருந்தது.

ரிக்ஷாத் தொழிலாளர்கள், கைவண்டிக்காரர்கள், குவளை ஏந்தியவர்கள், பொடிப் பயல்கள் ஆக கசகசவென்று முப்பது பேர்களுக்கு மேல் தாங்க முடியாத பெருங்கூட்டம். ஆர்மோனியத்தின் அலறலும், தபேலாவின் 'கும் கும்'மும் அப்போதே என்னை சினிமா வானில் மிதக்க விட்டன.

ஒற்றைத் திரை தொங்கவிட்ட அரங்கில் 'விக்' வைத்துப் பவுடர் பூசிக் கரத்தில் ஜிகினு ஒட்டிய வீர வாள் பிடித்துக் கம்பீரமாக நுழைந்த முனிகபூரைக் கண்டு மக்கட்கூட்டம் 'ஹோ'வென்று ஆரவாரித்தது.

ஹீரோ கதாநாயகியுடன் (ஆண்தான்) டயலாக் பேசிக் 'கூனி' இயற்றிய டூயட்டை ஆர்மோனிய சுருதியை அலட்சியமாக ஒதுக்கித் தள்ளி அட்டகாசமாகப் பாடலானார்.

மின் மினுக்காம் மைனாக் குருவி
மயக்கும் சின்னக் குருவி
மானைப் போல் ஓடிவந்தா ஆட்டமாடி - அவ
மையலிலே மாட்டிக்கிட்டேன் - பாட்டுப் பாடி!

கூட்டம் 'உய் உய் உய்' என்று விசிலடித்துக் கரகோஷம் செய்து, 'ஒன்ஸ் மோர்' கேட்டது. காமரா கணேசு பளிச் பளிச் சென்று போட்டோ எடுத்துத் தள்ளினன்.— என்னையும் சேர்த்துத்தான். புரொடக்ஷன் மானேஜரா கம்மாவா?

கவிஞர் எதிர்ப் பங்களா பக்கம் ஜாடை காட்டினர்.

''அதான் மோஹினி, பக்கத்துலே நீலச் சேலே.... ராணி.... நம்ப பாட்டைக் கேட்டதுமே என்னமா வெட்கப்பட்டுக்கினு உள்ளே போவுது பார்த்தீங்களா?... அதுக்குப் புடிச்சுப் போச்சுன்னு நல்லாத் தெரியலே?''

''ஆமா, ஆமா, தெரியுது.''

முனிகபூர் கூனிக்குச் சைகை காட்டினர். கூனி என்னை ஒதுக்குப்புறமாகத் தள்ளிக் கொண்டு போனர்.

''ஸாரு, இப்ப நம்ப புரோகிராமுலே மொதல் கட்டம் இனினு முடிஞ்சு போச்சு. அடுத்தபடியா....''

''ஷூட்டிங்!'' என்றேன் நான்.

''அதுக்கு முன்னே மோஹினியை நம்ப முனிகபூர் அலாக்காத் தூக்கணுமே!''

கூனி சுச்சிதமாக விவரித்தார், திட்டத்தின் அடுத்த கட்டத்தை.

அன்றிரவு மோஹினிக்கு நைட் ஷூட்டிங். பத்து மணிக்குப் புறப்படுவாள். கார் டிரை



"வேலை செய்யற நேரத்தில் போய் முடி வெட்டிக் கொள்ளலாமா?"
"அது வேலை செய்யற நேரத்தில்தானே வளர்ந்தது!"
"எல்லாமேவா?"
"நான் எல்லாத்தையும் கட் பண்ணிக்கலையே? கொஞ்சம் தானே கட் பண்ணின்டேன்!"

வரைச் சரிக்கட்டியாகி விட்டது. முன் அறிவிப்பின்றி அவன் மட்டம் போட, காரில்லாமல் தவிக்கும் மோகினியை முனிகபூர் தன் ரிக்ஷாவில் ஏற்றிக் கொண்டு ஸ்டுடியோவுக்குப் போவான்... ஸ்டுடியோவுக்குப் போற வழியிலே ஒரு பள்ளம். ரிக்ஷா அதிலே திடீர்னு கொடை சாயும். உடனே முனிகபூர் மோகினியை வட்டுக் கணக்கா தூக்கறதுக்கும் அங்கே தயாரா நிக்கற கனேக பளிச் பளிச்சுன்னு நாலஞ்சு ஷாட் வெளுக்கறதுக்கும் 'கரீட்'டா இருக்கும். இதிலே மானேஜர் ஸாருக்கும் ஒரு வேலை. அந்தப் பள்ளம் நம்ப வூட்டுப் பக்கத்துத் தென்னந்தோப்புலே இருக்குது. அந்தப் பக்கம் போலீஸ் எதுவும் வராத படி பார்த்துக்கிறது உன் டூட்டி!"

"ஐயையோ!"

"பயப்படாதே! ஒண்ணும் ஆவாது. நம்ப பிளானு சக்சஸ் ஆனதுமே நீ வேலையை வுட்டுட்டு நேரே பிச்சாண்டிகிட்ட வந்துடலாம். எக்கச்சக்கமாகப் பணம் பண்ணலாம்!"

என் வீட்டு மாடி அறையிலிருந்து பார்த்தால் தென்னந்தோப்பு நன்றாகத் தெரியும். உட்கார்ந்த இடத்தில் கோபாலு கொடுத்த 'டூட்டி'யைக் கவனிக்கலாமே!

மணி பத்து. நிசப்தம். இருட்டு. எனக்கு விறுவிறுப்பு.

திடீரென்று அபயக் குரல் கேட்டது.

"ஐயோ, ஐயோ!"

அடுத்தது 'பளிச் பளிச்'!

சபாஷ்! கனேக போட்டோ எடுத்து விட்டான். முனி கபூருக்கு ஜே!

அதைத் தொடர்ந்து இன்னும் ஏழெட்டுப் பளிச்சுகள். டார்ச் லைட்டுகளோ?

ஒளி வெள்ளத்தில் கதாநாயகன் முனி கபூர் மயக்கமடைந்த கதாநாயகியை இரு கரங்களிலும் தூக்கிக் கொண்டு வீரனைப் போல நின்ற காட்சி! ஆஹா... அற்புதம் போங்கள்! சுற்றிலும் ஏழெட்டுப் பேர்.

ஓடிப்போய் முனி கபூரை அப்படியே தழுவிக்கொள்ள வேண்டும் போலிருந்தது.

ஏதோ கசமுசா சத்தம். இடையிடையே உரத்த குரல்கள்: "இத்தினி பேருக்கு முன்னாலே இப்பிடி அயோக்கியத்தனம் பண்ணிட்டு ஓடப்பாத்தா வுட்டுடுவமா?"

"மரியாதையா இதுங் கழுத்திலே தாலியைக் கட்டச் சம்மதிக்கிறயா, இல்லே டேசனுக்குத் தள்ளிப் போவணுமா?"

எனக்கு அங்கே ஓடிப் போய்ப் பார்க்க வேண்டுமென்று ஆவல் துடித்தது.

"புஷ்பா!... ஏ... புஷ்பா!" மனைவியைத் தான் கூப்பிட்டேன்.

என்னை மாடியில் தள்ளிவிட்டுத் தான் மட்டும் வேடிக்கை பார்க்கப் போய் விட்டாளே! நான் மாடியில் இருக்கும்போது திறந்த வீட்டில் யாராவது நுழைந்து விடக் கூடாதே என்று வாசலைப் பூட்டிக் கொண்டும் போயிருக்கிறாள்! கழுதை!

கொஞ்சம் கொஞ்சமாகச் சந்தடி ஒய்ந்தது. விளக்குகளும் அணைந்தன. புஷ்பா ஓடிவந்து கதவைத் திறந்தாள்.

"ஏன்னா, விஷயம் தெரியுமோ?"

"தெரிஞ்சுக்க முடியாமத்தான் பூட்டிண்டு போயிட்டியே!"

"இருக்கட்டும், கேளுங்கோ! நம்ம சிங்காரம் ஒரு பொண்ணை..."

"அலாக்காத் தூக்கிண்டு..."

"அது யார் தெரியுமோ?"

"தெரியாம என்ன, சினிமா ஸ்டார் மோகினிதானே!"

"சேச்சே! இதிலே போய் வேடிக்கை பண்ணறிங்கோ! அது அவன் மாமன் மகள் முத்தழகு!"

"முத்தழகா? அவ எப்படி அங்கே வந்தா?"

"அந்தச் சினிமாக்காரி வீட்டிலே ராணிங்கிற பேரிலே வேலை செஞ்சிண்டிருந்தாளாம் முத்தழகு. சிங்காரம் அவளை எப்பவோ சின்ன வயசிலே பார்த்தது. அடையாளம் தெரியலே. ஆனா அவளுக்கு மட்டும் முதல்லே யிருந்தே சிங்காரம் தன் அத்தான்தான்னு தெரியுமாம்."

பாவம், முனி கபூர், வெளுத்ததெல்லாம் பால் என்று நினைப்பவன். மோகினிக்கு 'நைட் ஷூட்டிங்' என்று ராணி சொன்ன பொய்யை நம்பியதோடு விட்டானா? மோசடி பண்ண வேண்டுமென்றே திட்டம் போட்டு, இருட்டில் தன் எஜமானியைப் போல் டிரஸ் செய்து கொண்டு நின்ற இவளை ஏமாந்து போய் ரிக்ஷாவில் ஏற்றிக் கொண்டு லொங்கு லொங்கு என்று ஓடி வந்திருக்கிறான்.

"கடைசியில் என்னதான் ஆச்சு புஷ்பா?"

"என்ன ஆகணும்? அவா ரெண்டு பேருக்கும் அடுத்த வாரம் கல்யாணம்."

"சிங்காரமா சம்மதிச்சான்?"

"ஒரு நிபந்தனையோட, அதாவது 'முத்தழகு என்ற மோகினியை, சிங்காரம் என்கிற முனிகபூருக்கு விவாகம் செய்து கொள்வதாய்....' என்று கல்யாணப் பத்திரிகையிலே போட்டுத்தான் ஆகணும்னு சொல்லிட்டான்!"

எனக்கு ஒரே குஷி.

"அப்படிச் சொல்லு" என்றேன். முனி கபூர் தன் சபதத்தை ஓரளவுக்காவது நிறைவேற்றாமல் விட மாட்டானே!

இதைப் போல அவனது 'மைனக் குஞ்சு'க்கும் ஓரளவுக்காவது வழி பிறந்தால்? அதாவது முனி கபூரோடு முத்தழகு என்கிற மோகினியையே ஹீரோயினாப் போட்டு...

நினைக்கவே நன்றாக இருக்கிறது. எனக்கும் ஒரு சினிமா சான்ஸ்! காலையில் முதல் வேலையாகக் கூளியை அனுப்பிப் பிச்சாண்டியைப் பிடிக்க வேண்டும். வாழ்க 'மைனக் குஞ்சு'!

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட **மும்மடங்கு** ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போடலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது

# யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-20TAM



# விருந்தில் மருந்து!



நகைச்சுவை விருந்திலே நாட்டுக்கும் வீட்டுக்கும் மருந்தும் கொடுத்தவர் என்.எஸ்.கே. மாதிரிக்குச் சில :

○ சதானந்தம் (என். எஸ். கே.) சிகரெட் பிடிக்கும்போது நீலக் கண்ணாடியுடன் ஒட்டுறுப்போல் அவன் தன்னை அணுகுகின்றாள் சாந்தா (மதுரம்).

என். எஸ். கே.: உம்! விடு! விடு!

மதுரம்: சிகரெட்! இனிமே சிகரெட் குடிக்காதீங்க!

என்.எஸ்.கே.: என்ன பலம்! என்ன பலம்! இதுக்குத்தான் படிச்ச பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கணும்கிறது!

மதுரம்: ஏன்! அவளும் சேர்ந்து சிகரெட் பிடிப்பாங்கிறதுக்கா?

என்.எஸ்.கே.: அதுக்கில்லே! படிச்ச பெண்ணுக்கு இவ்வளவு பலம் இருக்காதில்லே!

○ என். எஸ். கே. வேலை செய்யும் பாங்கு மூடப்படுகிறது. அதைக்கண்டதும் என்.எஸ். கே. கண்களை மூடிக் கொள்கிறார்.

அப்போது அங்கே வந்த வாட்ச்மேன்: இந்தாங்க, தண்ணி!

என். எஸ். கே.: எதுக்குத் தண்ணி?

வாட்ச்மேன்: அட! மயக்கம் இல்லியா?

என்.எஸ்.கே.: மயக்கமா? அது என்கிட்ட ஏன் வருது?

வாட்ச்மேன்: பாங்கை மூடிட்டாங்களே!

என். எஸ். கே.: இந்தா, பாங்கை மூடு, கடையை மூடு, வீட்டை மூடு, இந்த ஊரையே மூடு! அதைப்பத்தி எனக்குக் கவலையில்லே! என் பெண்டாட்டி வாயை மூட முடியாதே! அவளுக்கு என்ன பதில் சொல்வேன்!

○ மதுரம்: என்னுங்க! புதுமாதிரியான புடிங் என் கையாலே செஞ்சது! உம்! சாப்பிடுங்க!

என்.எஸ்.கே. (ருசி பார்த்தபடியே): இதை எப்படிச் செஞ்சே?

மதுரம்: பாக சாஸ்திரப் புத்தகம் இல்லே, அதைப் பார்த்துத்தான் செஞ்சேன்!

என்.எஸ்.கே.: அந்தப் புத்தகத்தைக் கொஞ்சம் எடுத்துக்கிட்டு வாயேன்!

மதுரம்: ஏன்?

என்.எஸ்.கே.: இதை எப்படித் திங்கறதுன்னும் அதிலே போட்டிருக்கான்னு பார்க்கலாம்!

படம்: முதல் தேதி

○ வாசலில் வந்து நின்ற பிச்சைக்காரனைப் பார்த்து விட்டு மதுரம் பக்கம் திரும்பிய என். எஸ். கே.: ராஜா வந்திருக்கிறாரு! இந்நாட்டு மன்னர் வந்திருக்கிறாரு! அவருக்கு இரங்கி ஏதாவது கொடுத்து அனுப்பு!

மதுரம்: ஒண்ணும் கிடையாது! நீங்க கொண்டுவந்த சுதந்திரம்தான் இருக்கு!

பிச்சைக்காரன்: அதையாவது இரண்டு போடம்மா!

படம்: மணமகள்

(ஐம்பதும் அறுபதும் நாடகம்)





பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | | தங்கும் இடம் |
|---|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை | 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை | 3-00 -- 6-00 | பாம்பே ஹால் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை | 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை | 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை | 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ் பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை | 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை | 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை | 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை | 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை | 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் சப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை | 9-11 | லக்ஷ்மி ராஜபவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை | 3 - 5 | |
| ,, செவ். பேட்டை | 16 | மாலை | 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை | 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை | 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை | 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை | 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை | 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை | 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை | 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை | 3-00 -- 5-00 | P. L. R. அண்டு கோ., தெப்பக்குளம், மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை | 10-00 -- 11-00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை | 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை | 5-00 -- 6-00 | மீனாட்சி டுபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை | 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை | 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ணா மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை | 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை | 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், தீபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை | 3-00 -- 4-00 | பாரதீய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை | 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை | 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை | 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை | 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை | 9-11 | 14. V. இரால் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை | 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-11, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87)
திருச்சி ஜில்லா

## 50. தண்டனை!

மைக்கேலை ஏற்றுக் கொள்வது என்று தீர்மானித்துவிட்ட மறு கணம் பழைய மனத் தடுமாற்றங்கள் எல்லாம் அர்த்தமற்றவையாகத் தோன்றின அனுபமாவுக்கு. நேற்று வரையில் நிலவிய அசட்டுச் சந்தேகங்களை எண்ணிச் சிரித்தாள்; இன்றையப் புது அனுபவத்தில் சிலிர்த்தாள்; அலை பாய்ந்த மனம் அடங்கி அமைதி பெற்றதிலே ஆனந்தக் கண்ணீர் சிந்தினாள்!

மைக்கேலிடம் தான் கொண்டிருந்தது நட்பா, காதலா என்று புரியாத ஒரு தயக்கம், வேற்று நாட்டவர்கள், வேற்று மதத்தவர்கள் என்ற எண்ணத்தால் ஏற்பட்டதாய் இருந்திருக்கலாம். அவையெல்லாம் இந்தக் கணத்தில் காதல் நெருப்பில் சருகுகளாகப் பற்றி எரிந்து சாம்பராகிக் கொண்டிருந்தன. தனஞ்செயனைச் சந்தித்தபோது அவன்பால் அவள் ஈர்க்கப்பட்டதும் அதனால் அவள் மனத்தைக் கண்டு அவளே அஞ்சி நடுங்கியதும் உண்மைதான். ஆனால் தன் உள்ளத்தின் பலவீனத்தைக் கண்டு அவள் நடுங்கியதைவிட இந்தத் தடுமாற்றத்தை மைக்கேல் புரிந்து கொள்வதினால் அவனுக்கும் தனக்கும் இடையே உள்ள தொடர்பு அற்றுப் போய் விடுமோ என்பதற்காகவே அவள் அதிகமாகப் பயப்பட்டாள். தனஞ்செயனின் விருப்பத்துக்கு இணங்கி மைக்கேலை ஏமாற்றி அழைத்து வந்தாள் என்பது மைக்கேலுக்குத் தெரிய வரும் போது அவன் தன்னை வெறுத்து ஒதுக்கிவிடுவானோ என்பதற்காக அவள் அதிகமாகக் கவலைப்பட்டாள்.

ஆனால் அவனோ தனது காதலின் நிமித்தம் அவளிடம் தான் கண்ட இந்தக் குறைகளை யெல்லாம் மன்னித்து மறந்துவிடத் தயாராயிருந்தான். அது மட்டுமல்ல; தான் கொண்டிருக்கும் காதலுக்காகப் பெரிய தியாகத்தைப் புரியவும் சித்தமாயிருந்தான். தேசத்துரோகியாக மாறவும் அதன் தொடர்பாக அமெரிக்கப் பிரஜா உரிமையை இழந்து விடவும்கூடத் தயாராயிருந்தான்! 'அவருக்கு என் மீதுள்ள



காதல் எவ்வளவு வலுவானதாக இருக்க வேண்டும், இப்படி ஒரு தியாகத்தைப் புரிய?' என்று எண்ணிய அதே கணத்தில் தன் மனத்திலும் காதல் வெள்ளம் பெருக்கெடுப்பதையும் காட்டாற்றின் வேகத்தோடு அது நதி தீரத்தில் சங்கமிப்பதையும் உணர்ந்தாள்.

விநாடிகள் நிமிஷங்களாக வளர்ந்து கொண்டிருந்தன. மைக்கேலின் நெஞ்சை அலங்கரித்த முகமலருக்கு விடுதலை இல்லை. அவன் தோள்களை அணைத்து நெளிந்த கரக் கொடிகளும் நெகிழ்ந்து கொடுக்கவில்லை. புதுமையான அந்த உணர்வை முழுமையாக அனுபவிக்கத் தீர்மானித்தவர்கள்போல் காணப்பட்டார்கள். மனங்களின் ஐக்கியத்தை நெஞ்சங்களின் நெருக்கத்திலே நிலைக்கச் செய்த அவர்களுக்குச் சூழ்நிலை பற்றிய பிரக்ஞையே இல்லை! 'விண்வெளியில் மிதக்கிறார்களா!' — என்று நினைத்தான் தனஞ்செயன். மெல்லக் கனைத்தான்.

மைக்கேலின் கண்கள் இலேசாகத் திறந்தன. தனஞ்செயன் அங்கு இருப்பதைக் கண்டன. அனுபமாவின் சிரத்தை வருடிக் கொடுத்தபடியே அவன் சொன்னான்: '' தனஞ்செயன்! எனக்கு மாப்பிள்ளைத் தோழனாய் நீ இருப்பாயா? பதிவுத் திருமணத்தின் போது உடனிருந்து சாட்சிக் கையெழுத்துத் தேவைப்பட்டால் போடுவாயா ?''

'' கங்கிராஜுலேஷன்ஸ்!'' என்று வாழ்த்துக் கூறி ஏமாற்றத்தை வெளிக் காட்டிக் கொள்ளாது தொடர்ந்தான் தனஞ்செயன்: ''உன் மண வாழ்க்கை மகிழ்ச்சி நிரம்பியதாய் இருக்கட்டும். பதிவுத் திருமணம் பற்றிய எல்லா ஏற்பாடுகளையும் நான் கவனித்துக் கொள்கிறேன்.''

''அதை எவ்வளவு சீக்கிரம் முடியுமோ செய்'' என்று ஆர்வத்துடன் மொழிந்த மைக்கேலின் குரல் சட்டென்று மாறி அதில் ஏமாற்றம் ததும்பியது: ''எங்கள் திருமணம் எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாய் நடைபெறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரமாக உன் நோக்கமும் நிறைவேறும். விண்வெளித் துறையில் இந்தியாவின் வெற்றியும் தார்மிக முறையில் எனது வீழ்ச்சியும் ஆரம்பமாகும்!''

விசுக்கென்று அவன் நெஞ்சிலிருந்து தலையைத் தூக்கி அவனை ஏறிட்டுப் பார்த்தாள் அனுபமா. ''மைக்! உன்னை நீயே வதைத்துக் கொள்கிறாய்!''

''இல்லை அனு. நான் வருத்தப்படவில்லை. உன்னிடம் எனக்குள்ள காதல் முழுமையாக நிறைவேறிய பிறகு எனக்குத் துயரம் என்பதாக எதுவுமே இருக்க முடியாது. ஆனால் ஏமாற்றம் என்பதுகூடவா எட்டிப் பாராமல் தடுக்க முடியும்? இந்தக் காதல் பரிமாற்றம் அமெரிக்காவில் தனஞ்செயனை நாம் சந்திக்குமுன்பே ஏற்பட்டிருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும் என்று எண்ணிப் பாராமல் தவிர்ப்பது எப்படி? அனு! உண்மையை மூடி மறைப்பதில் பயன் என்ன? உனக்கும் எனக்கும் இனி எதிர்காலம் என்பதாக என்ன இருக்கிறது? பரஸ்பரம் பரிமாறிக் கொள்ளும் காதலைத் தவிர வேறு எதுவுமே கிடையாது. அந்தக் காதலிலேயே நான் திருப்தியடைந்து விடவும் தயார். நீயும் அந்த நிலைக்கு உன் மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்!''

''எதிர்காலத்தை நான் உங்களுக்கு ஏற்படுத்தித் தருகிறேன்'' என்றான் தனஞ்செயன். ''இங்கே உங்கள் பணி முடிந்ததும் இரகசியமாக உங்களை ஹாங்காங்குக்கு அனுப்பி விடுகிறேன். இந்தியப் போர்க் கப்பல் ஒன்றிலிருந்து நீங்கள் ஒரு சீனத் தோணியில் கரையோரமாக இறக்கி விடப்படுவீர்கள். பத்திரிகை நிருபர்கள் உங்களைச் சந்திக்கும் போது செஞ்சீனாவிலிருந்து நீங்கள் தப்பி வந்ததாக ஒரு கதையைப் பரப்புங்கள்.

'' 'இந்தியாவி லிருந்து செஞ்சீனாவுக்கு நாக்ஸலைட்டுகளால் கடத்திச் செல்லப்பட்ட அமெரிக்க விஞ்ஞானிகள் காவலிலிருந்து தப்பி, பல அபாயங்களுக்கு உட்பட்டுக் காண்டன் நகரை அடைந்தனர்; அங்கிருந்து ஒரு மீனவனின் தோணியைத் திருடிக் கொண்டு கடலில் தத்தளித்துச் சிரமப்பட்டு ஹாங்காங் வந்து சேர்ந்தனர்.' உங்களுடைய உருக்கமான இந்தக் கதை உலகை உலுக்கும். அமெரிக்கா திரும்பும் போது மாவீரனுக்குரிய மகத்தான வரவேற்பு உங்களுக்குக் காத்திருக்கும் !''

''தனஞ்செயன்'' என்று நிதானமாக அழைத்து அமைதியாகப் பேசினான் மைக்கேல்: ''நான் சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே! நீ எத்தனையோ அசட்டுத்தனங்களைச் செய்து விட்டாய் ! அதற்கெல்லாம் சிகரம் வைத்தது போல் இப்படி ஒரு காரியத்தைப் பண்ணி வைக்காதே !''

''அசட்டுத்தனமா? நானா ?'' என்று சீறினான் தனஞ்செயன்.

''வேறென்ன? உன்னுடைய சாமர்த்தியமா என்னை இங்கே இழுத்து வந்து உங்களுடன் ஒத்துழைக்கவும் செய்கிறது? அனுபமாவிடம் எனக்குள்ள காதல் அல்லவா இதையெல்லாம்

சாதித்தது ! உன்னுடைய உள் நோக்கங்களை இம்மி அளவும் பிசகாமல் ஊகித்து உணர்ந்து எஃப். பி. ஐ. என்னை எச்சரித்தது. அதெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காக முடிந்ததற்கும் அனுபமா மீது எனக்குள்ள ஆழ்ந்த காதல்தான் காரணமாயிற்று. காதல் அளப்பரிய சக்தி வாய்ந்தது. அது கோழையை வீரனாக்கும் ; வீரனைக் கோழையாக்கும். ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாதவனை மாபெரும் சாதனைகள் புரியச் செய்யும்; யோக்கியப் பொறுப்போடு இருந்தவனைத் தேசத்துரோகியாகவும் மாற்றும்!''

''துரோகம் என்று ஏன் குறிப்பிடுகிறீர்கள்? தியாகம் என்று சொல்லுங்கள் !'' என்றாள் அனுபமா.

''வார்த்தை எதுவாயிருந்தால் என்ன அனு? அவரவர் மனம் அடைகிற உணர்ச்சிதான் முக்கியம். உனக்குத் தியாகமாகத் தோன்றுவது என் மனத்துக்குத் துரோகம் என்று படலாமில்லையா ?''

''எப்படித் துரோகமாகும்? உங்களுக்கே தெரியும், இங்குள்ள விஞ்ஞானிகள் ஆற்றலில் கொஞ்சமும் சளைத்தவர்கள் அல்ல என்று. அவர்கள் தாமாகவே முயன்று இந்தத் துறையில் வெற்றி பெறாமல் போகமாட்டார்கள். கொஞ்சம் கால தாமதமாகும் என்று வேணுமானால் கூறலாம். அதைத் தவிர்த்துச் சாதனையைத் துரிதப்படுத்துவது ஒன்றே உங்கள் பணி. 'இந்தவிதமாகச் சிந்தித்துப் பாருங்கள்' என்று நீங்கள் கோடி காட்டினால் போதும். மற்ற விஷயங்களை அவர்களே கவனித்துக் கொள்வார்கள்.''

''இதெல்லாம் எனக்குத் தெரியாதவையல்ல அனு. ஒரு யோசனைகளை நான் தெரிவிப்பதால் அமெரிக்காவுக்கு மகத்தான நஷ்டம் ஏதுமில்லை. அமெரிக்கா இன்று செயற்கைச் சந்



இரவே அனுப்பும் நிலையைக் கடந்து, சந்திர மண்டலத்தை வெற்றி கொள்ளும் கட்டத்தையும் தாண்டி, பிற கிரகங்களை நெருங்கும் சாதனைகளைப் புரிந்து கொண்டிருக்கிறது. அது விண் வெளியில் விஞ்ஞானக்கூடத்தை மிதக்க விட்டிருக்கும் சந்தர்ப்பத்தில் நான் இங்கே வெளியிடக்கூடிய ஓரிரு விஷயங்கள் அரிச்சுவடிப் பாடமாகத் தான் இருக்கும். ஆயின் இப்படியெல்லாம் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ள நான் அறிவு முதிர்ச்சி அடையாதவன் அல்ல. பச்சைத் துரோகம் இது என்பது எனக்குத் தெரியும். இப்படி ஒரு பச்சைத் துரோகம் பண்ண வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு நான் உள்ளாகலாம் என்றுதான் எஃப். பி. ஐ. எதிர்பார்த்தது. ஆனால் நானே வலியச் சென்று துரோகம் இழைப்பேன் என்று அவர்கள் நினைக்கவில்லை. சித்திரவதைக்கு நீயும் நானும் உள்ளாக நேரலாம் என்று எதிர்பார்த்தார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் ஆளுக்கு ஒன்றாகப் பயன்படுத்திக் கொள்ள இரண்டு மாத்திரைகளையும் தந்தார்கள். படுக்கை அறையில் இருக்கிறது என் இடுப்பு பெல்ட். அதை எடுத்து வா, காட்டுகிறேன்!''

பெல்ட்டை அவள் கொண்டு வந்து, அதன் உட்புறத்தில் இருந்த தையலை மைக்கேல் பிரித்து, இரகசிய அறையில் இருந்த சிறு, மெல்லிய பெட்டியை எடுத்துத் திறக்கும் வரை யாரும் பேசவில்லை.

''என்ன மாத்திரை அது?'' என்றான் தனஞ்செயன்.

''ஸயனைட்'' என்றான் மைக்கேல். ''விழுங்கியபின் சில நிமிஷங்களுக்கு மேல் உயிர் தங்காது. உன்னைப் பற்றி இங்குள்ள ஸி. ஐ. ஏ. மூலம் ஏதாவது சாட்சியம் கிடைக்குமா என்றுகூட முயன்று பார்த்திருக்கிறார்கள். நடக்கவில்லை. சாட்சியம் ஏதும் இல்லாததால் பயணத்தைத் தொடராமல் என்னைச் சட்டபூர்வமாகத் தடுத்து நிறுத்த அவர்களால் முடியவில்லை. அதே காரணத்தால் அவர்கள் உங்கள் இருவரையும் பற்றிக் கூறியதையெல்லாம் நான் அவதூறுகளாகக் கருதி அலட்சியப் படுத்தினேன்.''

மைக்கேல் அந்த மஞ்சள் நிற மாத்திரைகளை அனுபமாவுக்கும் தனஞ்செயனுக்கும் கரம் நீட்டிக் காட்டினான். ''எத்தனை முன் எச்சரிக்கையாக இவை உடையாதிருக்க பஞ்சுக்குள் பொதிந்து வைத்திருக்கிறார்கள், பார்த்தாயா ?'' என்று கேட்டுவிட்டு மூடினான். 'டப்' என்று சிறு ஒலி அங்கு நிலவிய நிசப்தத்தில் துப்பாக்கி வெடிப்பது போல் பயங்கரமாய்க் கேட்டது !

''அனு! நீ உன் காதலை எனக்கு இன்று மனப்பூர்வமாய் அளித்திரா விட்டால் உன் மீது எனக்குள்ள காதலின் பொருட்டுத் தேசத் துரோகமான ஒரு காரியத்தை நான் செய்து விட்டு இந்த மாத்திரைகளையும் விழுங்கியிருப்பேன். ஆனால் உன் காதல் எனக்குக் கிடைத்துவிட்டது என்னும்போது என் உயிரின் மீது ஆசை பிறந்துவிட்டது! உன் விருப்பப்படி இந்தியாவுக்கு உதவியபின்னர், உன்னுடன் ஏகாந்தமான இந்தத் தீவிலோ அல்லது இது போன்ற வேறு ஓர் இடத்திலோ மீதமுள்ள வாழ்நாளை இல்லற இன்பத்தில் கழிக்க விரும்புகிறேன். எனக்கு விஷ மாத்திரைகள் தேவையில்லை.'' யாத்திரைப் பெட்டியை அவன் தனஞ்செயனை நோக்கி வீசினான். தனஞ்செயன் அதனை மின்னல் வேகத்தில் இயங்கிப் பற்றிக் கொண்டதும் மைக்கேல் தொடர்ந்து கூறினான்: ''உன்னுடைய அமெரிக்கப் பயணத்தின் ஞாபகார்த்தமாக இந்தப் பெட்டியை நீயே வைத்துக் கொள்! ஆனால் இங்குள்ள ஸி.ஐ.ஏ. ஆசாமிகள் யார் கண்ணிலாவது படாமல் பாதுகாப்பான இடத்தில் வை! இல்லாத போனால் சந்தேகங்களைக் கிளறிவிட்டதாக முடியும் !''

''மைக்! என்னுடைய காதலைப் பெற்ற இந்த நாள் முதல் உன் வாழ்க்கை ஓரே மகிழ்ச்சி மயமாக மாறிவிடும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் விரக்தி தொனிக்கிறது உன் குரலில்'' என்றாள் அனுபமா.

''சந்தோஷ சாகரத்தில்தான் நம் வாழ்க்கைப் படகு மிதக்கப் போகிறது அனு! ஆனால் சுற்றுவட்டாரத்தில் வேறு ஒரு படகை நாம் காண முடியாது!''

''ஏகாந்தம், தனிமை என்றெல்லாம் ஏன் பேசுகிறாய்? உன்னை நீயே ஓர் ஏகாந்தமான இடத்தில் சிறைப் படுத்திக் கொள்வதன் மூலம் உனக்கு நீயே தண்டனை வழங்கிக் கொள்ளப் பார்க்கிறாயா?''

''தண்டனைதான்!'' என்று கூறிச் சிரித்தான் மைக்கேல். ''ஆனால் அது நானே வழங்கிக் கொள்வதல்ல. நமது செயல்களின் உடன் விளைவான ஓர் இயல்பான நிகழ்ச்சி நாம் புரியும் தேசத் துரோகத்துக்குத் தண்டனையாகவும் அமைந்துவிடும்!''


அவள் மென்மையானவள்... அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள், உறுதியானவள்...
தீப்போன்றவள்... அவள் பெண்மையே உருவானவள்...
பட்டுப் போன்ற டால்க்... அன்னையைப்போல
மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி
அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில்
ஆழ்த்தும். அருமையான புது நறுமணம்
கொண்டது. அதுவே வெய்ல் ஆஃப் லவ்.
ஹேலோ மட்டுமே அளிப்பது. அதைத்
தாராளமாக மேனியெங்கும் தூவிக்
கொள்ளுங்கள். ஹேலோவிற்கெனவே
பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம்
நீண்ட நேரம் உங்களைத் தழுவி,
உங்களைச் சுற்றிலும் கமகமவென
வீசிக் கொண்டிருக்கும். வெய்ல்
ஆஃப் லவ் உங்களை அலங்கரிக்-
கட்டும். ஹேலோ மட்டுமே
அளிக்கும் வாசமுள்ள
அன்புத்திரை அது.
ஹேலோ வெய்ல் ஆஃப்
லவ் டால்க் வாசமுள்ள
அன்புத்திரை...
அன்னைப் போல
மிருதுவானது.
அவளுக்கு உகந்தது
ஹேலோ
வெய்ல் ஆஃப் லவ்
டால்க்
Halo




"எனக்கு விளங்கவில்லை, மைக்!" என்றாள் அனுபமா.

"நீ வேறு என்ன எதிர்பார்க்கிறாய், அனு? தனஞ்செயன் சற்று முன் கூறியது போல் ஒரு சாகசம் பண்ணலாம் என்றா? ஹாங்காங்கில் நாம் திடும் என்று முளைத்து அங்கிருந்து அமெரிக்காவுக்குப் பயணப்படலாம் என்றா? தனஞ்செயனுடைய அசட்டு யோசனைகளுள் தலைசிறந்தது இது என்று உனக்குப் புரியவில்லையா?"

"ரொம்ப என் பண்டையை உருட்டாதே" என்று கூறிப் பற்களை நற நறவென்று கடித்தான் தனஞ்செயன்.

"நீ கோபப்பட்டு என்ன பயன்? உன்னை ஆட்டிப் படைக்கும் விசை இப்போது என்னிடம் இருக்கிறது" என்று கூறிக் கேலியாகச் சிரித்தான் மைக். "என்னால் உனக்குக் காரியம் ஆக வேண்டும் அல்லவா?"

இவ்வாறு கேட்டுவிட்டு அவன் தொடர்ந்து பேசினான்: "சீனாவுக்கு நாங்கள் நாக்ஸலைட்டுகளால் கடத்தப்பட்டதாகச் செய்தி இதற்குள் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும்..... இதைப் பார்த்ததும் எஃப்.பி.ஐ. என்ன முடிவுக்கு வரும்? தேசத் துரோகிகளாக மாறுவதைவிட மடிவதே மேல் என்ற கருத்தில் விஷ மாத்திரைகளை நாங்கள் விழுங்கியிருப்போம் என்றுதான் அதிகாரிகள் நம்புவார்கள். அவர்களது அந்த நம்பிக்கை நீடிப்பதுபோல் நாம் நடந்து கொள்வதுதான் உசிதம். எங்கள் மீது அமெரிக்க மக்களுக்கும் அனுதாபமும் பச்சாத்தாபமும் பெருகும். ஆனால் ஹாங்காங்கில் சிறிது காலம் பொறுத்து நாங்கள் திடுமென்று முளைத்தால் கூடவே சந்தேக விதையையும் ஊன்றியதாக ஆகும். ஏறத்தாழ அதே சமயத்தில் இந்தியாவின் முதல் விண்வெளி வெற்றியும் நிகழும். ஒன்றுக்கொன்று அவர்கள் முடிச்சுப் போடுவார்கள். இங்கேயுள்ள ஸி. ஐ. ஏ. ஏஜண்டுகள் தீவிரமான புலன்விசாரணையில் இறங்குவார்கள். எஃப். பி. ஐ. எங்கள்மீது வழக்குத் தொடராமல் விடாது!"

"வழக்கு நடத்தட்டுமே! என்ன நிரூபிக்க முடியும் அவர்களால்?" என்று தனஞ்செயன் வீம்புடன் கேட்டான்.

"எதையும் நிரூபிக்க அவர்களுக்குச் சாட்சியம் கிடைக்காமலே போகலாம். அந்த அளவுக்கு நீ சாமர்த்தியமாகவும் இயங்கலாம். நீதிபதிகள் எங்களை விடுவித்தும் விடலாம். ஆனால் வழக்கு நடக்கும் போது டெலிவிஷன் மூலமாக எங்களுக்கு ஏற்படக்கூடிய அபகீர்த்தியை எண்ணிப் பார்த்தாயா? தேசத்துரோகி என்று குற்றம் சாட்டப்






பட்டுப் பத்திரிகைகளில் பக்கி பக்கியாக வழக்கு விவரங்களும் புகைப்படங்களும் வெளியாவதைவிட ஒருவனுக்கு வேறு என்ன அவமானம் வேண்டும்? விடுதலை பெறுவதாகக் கொண்டாலும் அதன்பின் என்னை நோக்கும் அமெரிக்கக் கண்கள் அனைத்திலும் சந்தேகம் குடிகொண்டிருப்பதைப் போன்ற பிரமை சதா என்னைச் சூழ்ந்து கொண்டிருக்கும். அதைவிட அனுபமாவோடு இது போன்ற ஓர் ஏகாந்தமான தீவில் நிரந்தரமாக அஞ்ஞாதவாசம் புரிவது எவ்வளவோ மேல்! இங்கே கூட வேண்டாம்; லட்சத் தீவுகளின் எங்கோ ஒரு மூலையில் எங்களுக்கு ஒரு குடிசை போட்டுக் கொடுத்தால் போதும். அத்தியாவசியச் செலவுகளுக்கு மட்டும் பாரத அரசு ஒரு சிறுதொகையை ஓய்வு கால ஊதியமாகத் தரட்டும். இங்கே என் பணியை முடித்துவிட்டு 'ரிடைய'ராகிவிடுகிறேன். பாரதத்தின் அடைக்கலப் பிரஜையாகிவிடுகிறேன்.''

தனஞ்செயன் பிரமித்துச் செயலிழந்து போனான். அவ்விருவரது காதலும் நிறைவேறும் கட்டத்தில் அவர்கள் எதிர்காலம் பறிபோய்விட்டதை நிதர்சனமாக உணர்ந்தான். அவர்கள் அமெரிக்கா திரும்ப முடியாது என்பது மட்டும் அல்ல. இந்தியாவிலேயேகூட நினைத்த இடத்துக்குப் போய்வர முடியாது. புதிய நண்பர்களை ஏற்படுத்திக் கொள்ளவும் கூடாது. இவர்கள் இங்கிருப்பது தெரிந்தால் அமெரிக்க அரசு உடனே இவர்களை அந்நாட்டுக்குத் தருவிக்கச் சட்டபூர்வமான ஏற்பாடுகளை மேற்கொண்டு, பிறகு வழக்குத் தொடரவும் முற்படும். எனவே, வெளி உலகைப் பொறுத்தவரையில் இவர்கள் செஞ்சீனாவுக்குக் கடத்திப் போகப் பட்டவர்கள்தாம். எஃப்.பி.ஐ. கருத்தில் இவர்கள் தற்கொலை செய்து கொண்டு மாண்டவர்கள் தாம். கொடிய குற்றம் புரிந்தவர்களைத் தேசப் பிரஷ்டம் செய்து ஏகாந்தத் தீவுக்கு அனுப்பிவிடுவார்களாமே? அதுவாகவே ஆயிற்று இவர்கள் நிலையும். மைக்கேலைப் போன்ற மாமேதையான ஒரு விஞ்ஞானிக்கும் கிட்டத்தட்ட அவனுக்கு இணையான அறிவாற்றலைப் பெற்றுள்ள அனுபமாவுக்கும் இது எவ்வளவு ஏமாற்றத்தை அளிக்கும்! மனத்துக்கு உகந்த ஆராய்ச்சிகளைத் தொடர முடியாமல் செயலற்றுச் சோம்பிக் கிடப்பதைவிடப் பெரிய சாபமாக அவர்களுக்கு யார் கொடுக்க முடியும்?

அப்படி அவர்கள் வாழ்க்கையைச் சூறையாடிய பயங்கரக் கொள்ளைக்காரனைத் தன்னையே கண்டான் தனஞ்செயன்.

(தொடரும்)





பெங்களூர், பஞ்சாப் நேஷனல் பாங்க் ஸ்ரீ K. P. சுப்பிரமணியம் அவர்கள் குமாரத்தி சௌ. ராதாவுக்கும் புதுடில்லி, ஆல் இந்தியா ரேடியோ மிருதங்க வித்வான் ராமநாதபுரம் ஸ்ரீ V. ஈஸ்வர அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி காசிநாதன் என்கிற வைத்தியநாதனுக்கும் பெங்களூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



திருமணம்
ஒன்.. டூ...
போட்டோ கிராபர் சார் போட்டோ அங்கிள்!
கௌரி... ..கல்யாணம்.. வைபோகமே..
டயம் ஆச்சு!
வரா...
மாமி. டான்ஸ் பிரமாதம்.
அடி அமுதா, புது டிசைனடி. ஐ லைக் இட்!
டிபன் எந்தப் பக்கம்?
வாங்கோ வாங்கோ
ஆ.. ஆ..

# இதோ இருக்கிறது வழி!




நிராஜா

"இப்படி வாயை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தால் எப்படி? இதற்கு ஒரு வழி பண்ண வேண்டாமா?'' என்று கேட்டார் பிரதம மந்திரி, நிதி அமைச்சரைப் பார்த்து.

''கட்டாயம் பண்ணத்தான் வேண்டும்!'' என்றார் நிதி அமைச்சர் பலமாகத் தலையை ஆட்டியபடியே.

''சேச்சே! நிலைமை இவ்வளவு மோசமாகப் போகும் என்று நான் நினைக்கவே யில்லை!'' என்றார் பிரதமர் அடுத்தபடி.

''நாங்களும்தான்!'' என்று அவருடன் ஒத்துப் பாடினார்கள், மந்திரி சபைக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக வந்திருந்த அத்தனை அமைச்சர்களும்.

''சரி, என் நேரத்தை வீணாக்காதீர்கள். உருப்படியான யோசனை ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்... உம், கம் ஆன்!'' என்று விரலைச் சொடுக்கினார் பிரதம மந்திரி.

''எனக்குத் தெரிந்த ஒரே வழி ஜனங்களிடையே பிரசாரம் செய்வதுதான். அதாவது 'நிறையச் செலவு பண்ணுங்கள்!' என்று அடித்துச் சொல்ல வேண்டும்!'' என்றார் நிதி அமைச்சர்.

''அதே போல் 'நிறையச் சாப்பிடுங்கள்! ஒரு நாளைக்கு ஆறு வேளையாவது சாப்பிடுங்கள்!' என்று பிரசாரம் செய்ய வேண்டும்!'' என்றார் உணவு அமைச்சர்.

''அது மட்டும் போதாது.... 'நிறையப் பயணம் செய்யுங்கள்!' என்றுகூடப் பிரசாரம் செய்யலாம்.... பிரயாணம் என்றால் பணம் நிறையச் செலவழியுமல்லவா?'' — இது போக்குவரத்துத் துறை அமைச்சர்.

''நான் தொழிலதிபர்களை யெல்லாம் கூட்டித் தீர்மானமாகச் சொல்லிவிடப் போகிறேன்: 'நம்முடைய பொருளாதாரம் பிழைக்க வேண்டுமானால் உற்பத்தியை எப்படியும் நீங்கள் குறைத்தே ஆக வேண்டும். அப்படி இல்லாமல் — இதே ரீதியில் போனோமென்றால் — நமக்குக் கதி மோட்சமே கிடையாது!' என்று'' — இப்படிக் கூறியவர் தொழில் அமைச்சர்.

''அறுபது கோடி விளம்பரச் சுவரொட்டிகள் அச்சடிக்க என்ன செலவாகும் என்று என் அமைச்சகத்தைக் கேட்டிருக்கிறேன். அது தெரிந்ததும் என் இலாகா 'குடும்ப விஸ்தரிப்பு இயக்க'ப் பிரசாரத்தில் முழு மூச்சுடன் இறங்கி விடும்!'' என்றார் சுகாதார நல அமைச்சர்.

''எத்தனை தரம் சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறார்களே இந்த ஜனங்கள்! 'வெளிநாட்டிலிருந்து என்னென்ன தேவையோ தாராளமாகத் தருவித்துக் கொள்ளுங்கள்' என்று நானும் கரடியாகக் கத்துகிறேன். யாராவது இலட்சியம் செய்தால்தானே!'' என்று குறைப்பட்டுக் கொண்டார் வர்த்தக அமைச்சர்.

விஷயம் வேறொன்றுமில்லை. இந்தியப் பொருளாதாரம் — என்ன மாயமோ, மந்திரமோ — ஒரேயடியாக உச்ச நிலைக்குச் சென்று விட்டது. நாட்டில் செல்வம் அபரிமிதமாகப் பெருகி விட்டது. உணவுப் பொருள்களின் விளைச்சல் மளமளவென்று அதிகரித்து விட்டது. தொழில் உற்பத்தியோ மற்ற நாடுகள் பார்த்துப் பொறாமைப்படும் அளவுக்கு உயர்ந்து விட்டது. சுருக்கமாகச் சொன்னால், லக்ஷ்மி தேவதை இந்தியாவில் நிரந்தரமாகக் குடியேறி விட்டாள்.

ஆனால் இந்த இந்திய மக்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு நாட்டின் நிலவரம் கொஞ்சமாவது தெரிந்திருந்தால்தானே?... எப்போதும் போலவே இப்போதும் அவர்கள் தங்களுக்கும் நாட்டின் பொருளாதாரத்துக்கும் சம்பந்தமே இல்லாதது போலவே நடந்து கொண்டு வந்தார்கள்.

அரசாங்கக் கஜானாக்களில் மட்டுமின்றி மக்களிடமும் பணம் நிரம்பி வழிந்தது. ஆனால் மக்கள்தான் அதிகம் செலவழிக்க முன்வரவே யில்லை. ரூபாயின் மதிப்பு வெகுவாக உயர்ந்து விட்டதனால், அதிகம் செலவு பண்ண அவசியமே இருக்கவில்லை. எனவே, பணத்தைச் செலவு பண்ணாமல் அப்படியே பாங்குகளில் போட்டு வைக்க ஆரம்பித்தார்கள்.




பாங்குக்காரர்களும்தான் என்ன செய்வார்கள்? விவசாயிகளும் சரி, தொழிலதிபர்களும் சரி, நல்ல வசதியுடன் இருந்ததால் யாருமே 'கடன் தாருங்கள்' என்று கையை நீட்டிக் கொண்டு பாங்குக்கு வரவில்லை. இன்னும் சொல்லப் போனால் போட்ட பணத்தை அவ்வப்போது எடுக்கக் கூடப் பொதுமக்களில் யாருமே பாங்குக்குப் போகவில்லை. பாங்கிச் சிப்பந்திகள் வேலை எதுவுமின்றி ஈயோட்டத் தொடங்கினார்கள். நாளடைவில் அதுவும் அலுத்துப் போகவே, 'கொடுக்கிற சம்பளத்துக்குத் தக்கபடி எங்களிடமிருந்து வேலை வாங்கிக் கொள்ளுங்கள்!' 'வேலை வாங்கு, இல்லையேல் வீட்டுக்கு அனுப்பு!' என்று கோரிக்கைகள் எழுப்பிக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார்கள்.

''பணத்தைப் போட்டு விட்டு எடுக்காமல் இருந்தால் அதற்கென நீங்கள் கட்டணம் செலுத்த வேண்டும்!'' என்று சில பாங்குக்காரர்கள் பொதுமக்களிடம் சொல்லிப் பார்த்தார்கள். இதற்குப் பயந்து கொண்டாவது பணத்தை எடுத்துச் செலவு செய்ய மாட்டார்களா என்ற நப்பாசையினால்தான் இப்படிச் சொன்னார்கள். ஆனால் பொல்லாதவர்களான பொதுமக்களோ, ''சரி, கட்டணம் கொடுத்து விடுகிறோம்'' என்று சொன்னார்களே தவிர, பணத்தை எடுக்கப் பாங்குப் பக்கம் போகவே இல்லை. எனவே, மக்களைக் கவர்ந்துஇழுப்பதற்காக,'பணம் எடுப்போருக்குப் பரிசு!' என்று கூடப் போட்டி நடத்திப் பார்த்தார்கள் பாங்க் ஆசாமிகள். ஊஹூம்! அதனாலும் பலன் ஏதும் ஏற்படவில்லை.

விவசாயத் துறையில் பெரிய பெரிய மாறுதல்கள் நிகழ்ந்தன. கலப்படமில்லாத ரசாயன உரம் அபரிமிதமாகக் கிடைத்ததால் உணவுப் பொருள்களின் உற்பத்தி பெருகி, வயல்களெல்லாம் பயிர்கள் செழித்துக் குலுங்கின. எல்லோருக்கும் தேவைக்கு அதிகமாகவே உணவுப் பண்டங்கள் கிடைத்தன. இந்தக் கட்டத்தில் விவசாயிகளும் போராட்டம் ஒன்றைத் தொடங்கினார்கள். 'உழுபவனுக்கு நிலம் எதற்கு?' 'விளைச்சலில் பெரும் பகுதி நில உரிமையாளர்களுக்கே!' என்றெல்லாம் கோஷங்கள் கிளப்பினார்கள். அரசாங்கக் கிடங்குகள் நிரம்பி வழிந்தன. அதன் காரணமாகக் கொள்முதல், கிள்முதல் என்று யாரும் விவசாயிகளை அணுகவே இல்லை. விவசாயிகள் மட்டும் ஏமாளிகளா என்ன? மூட்டை மூட்டையாக உணவுத் தானியங்களை இரவோடு இரவாக அரசாங்கக் கிடங்குகளில் கொண்டு வந்து தள்ளிவிட்டு மூச்சுப்படாமல் போனார்கள். ''உங்களைக் கைகூப்பிக் கும்பிடுகிறோம். தானிய மூட்டைகள் வேண்டவே வேண்டாம்... நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று அதிகாரிகள் கெஞ்சிக் கேட்டும் பயனில்லாமல் போயிற்று.

தொழில் துறையிலோ நிலைமை இன்னும் மோசமாக இருந்தது. ''தொழிலாளி என்று வந்து விட்டால் எட்டு மணி நேரம் மட்டும்தான் வேலை செய்ய வேண்டுமா என்ன? எங்கள் விருப்பப்படி பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்வோம். சம்பளத்தைத் தவிர ஓவர்டைம், அந்தப் படி இந்தப் படி என்றெல்லாம் கொடுத்து முதலாளிகள் எங்களை அவமானப்படுத்தக் கூடாது!'' என்று எல்லாத் தொழிற் சங்கங்களுமே நிர்வாகங்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டன. ''சம்பளம் கைநிறையக் கிடைக்கிறது. விலைவாசியோ படுகுறைவாக உள்ளது... இந்த லட்சணத்தில் போனஸ் என்று ஒன்று எதற்கு? நீங்களே வைத்துக் கொள்ளுங்கள், அந்தப் பணத்தை !'' என்று பல தொழிற்சங்கங்கள் போனஸை மறுத்தன. சில தொழிலதிபர்கள் இதற்கு உடன்படாததால், அவர்களுடைய தொழிற்சாலைகளுக்குள் இதர தொழிலாளர்கள் புகுந்து, எக்கச்சக்கமாக வேலை செய்து, பொருள்களை உற்பத்தி செய்து குவித்தனர். முதலாளிகள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைக்க, நிலைமையைச் சமாளிப்பதற்கென வந்த போலீஸார் எப்போதும் போல் இதையும் 'கண்டு கொள்ளாமலே' இருந்துவிட்டனர்.

உணவுப் பண்டங்களின் தரம் மிக உயர்வாக இருந்ததால், ஒரு வேளைச் சாப்பாட்டிலேயே இருவேளைச் சாப்பாட்டின் சத்தும் மக்களுக்குக் கிடைத்தது. இதனால் பெரும்பாலானவர்கள் தினமும் ஒரு வேளை மட்டுமே சாப்பிட ஆரம்பித்தார்கள். இதன் விளைவாகக் கடைகளில் உணவுப் பொருள்கள் சீந்துவாரின்றிக் கிடந்தன. வியாபாரிகள் இது குறித்துப் புகார் செய்தவுடன் அரசாங்கம், 'நன்றாகச் சாப்பிடுங்கள்', 'ஆறு வேளைச் சாப்பிடுபவனே அறிவாளி', 'பிடிக்காத உணவைக் குப்பைத் தொட்டியில் வீசுங்கள்' 'உணவுப் பண்டங்களை வாங்கிப் பாழடியுங்கள்!' என்றெல்லாம் பிரசாரம் செய்யத் தொடங்கியது. 'திருமணங்களிலும் இதர விருந்துகளிலும் குறைந்தபட்சம் ஆயிரத்துத் தொள்ளாயிரம் பேருக்காவது சாப்பாடு போட்டாக வேண்டும். இல்லையேல் அபராதம் விதிக்கப்படும்' என்று ஒரு சட்டம் கூட இயற்றியது.

மக்கள் தொகை அதிகமாக இருந்தால் அல்லவா அதிக உணவு செலவாகும்? ஒவ்வொரு குடும்பத்திலும் மூன்று அல்லது நான்கு

### விஷம மேதை !

இந்திய தத்துவ மேதை ஜே. கிருஷ்ணமூர்த்தியைப் பற்றி பெர்னார்ட் ஷா சொன்னது: 'இந்த நூற்றாண்டின் மிக அழகான மனிதர்!'

டெபொனேர் — பாபு

பேருக்கு மேல் கிடையாது என்ற நிலைமை வந்துவிட்டதால், படுசங்கடமாகப் போய் விட்டது. 'உணவுப் பொருள்கள் குவிவதைத் தடுக்க வேண்டுமானால் விவசாயிகளையும், வியாபாரிகளையும் நம்பிப் பிரயோசனமில்லை. மக்கள் தொகையை அதிகரிப்பதுதான் இதற்கு வழி' என்று அரசாங்கம் தீர்மானித்துப் பிரசாரத்தை முடுக்கிவிட்டது. 'ஒரே குழந்தை — பெருத்த அவமானம்!' 'பத்துக்குக் கீழ் வேண்டவே வேண்டாம்', 'நாம் இருவர் — நமக்கு இருபது!' என்ற கோஷங்களை உலவ விட்டதுடன், அதிகக் குழந்தைகள் உள்ள குடும்பத் தலைவருக்குக் 'குசேல சக்ர' விருது வழங்கிக் கௌரவிக்கவும் முன்வந்தது. தெருவெங்கும் 'அதிகக் குழந்தைகள் பெறுங்கள்' சுவரொட்டிகள், கோஷங்கள், பிரசார முழக்கங்கள், வீட்டுக்கு வீடு அரசாங்கப் பணியாளர்களின் அறிவுரைகள் என்று அமர்க்களப்பட்டது. இருந்தும் ஜனத்தொகை மட்டும் உயரவே இல்லை.

பெட்ரோல் அபரிமிதமாகவும், மலிவாகவும் கிடைத்ததால் தெருவுக்குத் தெரு பெட்ரோல் பங்குகள் முளைத்தன. ஆனால் பெட்ரோல் வாங்குவோரைத்தான் காணோம். வசதி படைத்தவர்கள் உட்படப் பலரும் பஸ்ஸிலேயே பயணம் செய்ய முற்பட்டதன் விளைவுதான் இது. 'பெட்ரோலைப் பயன்படுத்துவதில் கஞ்சத்தனம் பண்ணுகிறீர்கள்!' என்றும், 'காரையே பயன்படுத்துங்கள்!' என்றும் அரசாங்கம் தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்தியது. பெட்ரோல் செலவை அதிகரிப்பதற்காகவென்றே பிரதமரின் மகன் பெரிய கார்களைத் தயாரித்து மலிவு விலையில் வழங்கலானார். ஆனாலும் என்ன செய்தும் பெட்ரோல் விற்பனை உயரவே யில்லை....

மக்களின் இம்மாதிரியான முட்டாள்தனமான போக்கினால் இந்தியாவின் ஏற்றுமதி மளமளவென உயர்ந்துகொண்டே போயிற்று. இறக்குமதிகள் குறைந்தன. அரசாங்கத்தின் வசம் தங்கமும் அந்நியச் செலாவணியும் மலை போலக் குவிந்தன. அதைத் தடுக்க முடியாமல் அரசாங்கம் திக்குமுக்காடிப் போயிற்று. 'இந்தியப் பிரஜை ஒவ்வொருவரும் ஆறு மாதங்களுக்கு ஒரு தடவையாவது கட்டாயமாக அயல்நாட்டுப் பிரயாணம் போய்வர வேண்டும்' என்று சட்டம்கூட இயற்றிப் பார்த்தது. ஆனால் நிறையப் பேர் வழக்கம் போலச் சட்டத்துக்கு 'டிமிக்கி' கொடுத்து விட்டு, உள்ளூரிலேயே தங்கிவிட்டார்கள்.

அரசாங்கத்துக்குக் கவலை பிடித்துக் கொண்டது. 'நிலைமை இப்படியே போனால் தாங்காது' என்பதை உணர்ந்தார்கள். இதன் நேரடி விளைவாகவே, பிரதம மந்திரி தம் சகாக்களை அழைத்துப் பேசினார்.

ஆனால் மத்திய மந்திரிகளின் நடவடிக்கைகள் எதுவுமே பலன் தராமற் போகவே, பிரதம மந்திரி மிகவும் கவலைக்குள்ளானார். ஒரு நாள் இரவு தூக்கம் பிடிக்காமல் அவர் தமது மாளிகையில் உலாவிக் கொண்டிருந்த போது, 'ஏதாவது புத்தகம் இருந்தால் படித்துப் பார்க்கலாமே?' என்று தோன்றியது. தமது வாசக சாலையில் நுழைந்து, கைக்கு அகப்பட்ட ஏதோ ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு படிக்கலானார். அதைப் படிக்கப் படிக்க அவரது முகம் பிரகாசம் அடைந்தது. புத்தகத்தை மூடி வைத்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டு ஏதோ யோசித்தார். பிறகு 'அப்படித்தான் செய்ய வேண்டும்' என்று தமக்குத் தாமே கூறிக் கொண்டார். அவரது கவலையைப் போக்குவதற்கான வழியை அந்தப் புத்தகம் காட்டிவிட்டது!.... மறு நாள் முதலே அந்த வழியைப் பின்பற்றுவதெனத் தீர்மானித்தார்.....

அடுத்த ஆறாவது மாதமே நாட்டில் உணவு உற்பத்தி குறைந்தது. தொழிற்சாலைகளில் தகராறுகள் கிளம்பின. மக்கள் இஷ்டப்படி செலவு செய்ய ஆரம்பித்தார்கள். எங்கும் கலகங்கள் பெருகின; கலாட்டாக்கள் அதிகரித்தன. இந்தியாவின் இறக்குமதிகள் உயர்ந்து, ஏற்றுமதிகள் தாழ்ந்து, பொருளாதாரம் கலகலத்துச் சரிய ஆரம்பித்தது. பிரதமரும் இதர அமைச்சர்களும் அதைப் பார்த்துப் பெருமையில் பூரித்துப் போனார்கள்.

''ஆமாம், எப்படி இத்தகைய ஓர் அற்புதத்தைச் சாதிக்க முடிந்தது உங்களால் ?'' என்று பிரதமரை ஓர் அமைச்சர் தனிமையில்—ரகசியமாக — கேட்டார்.

''பழைய சரித்திரப் புத்தகம் ஒன்றை ஒரு நாள் படித்துப் பார்த்ததாகச் சொன்னேன் அல்லவா?.... அதிலேதான் இதற்கு விடையைக் கண்டுபிடித்தேன்!'' என்றார் பிரதமர்.

'' நான் ஆறு மாத காலமாக வெளிநாட்டில் அல்லவா இருந்தேன்? எனவே எனக்கு அந்த விடை என்னவென்று தெரியவில்லை.... தயவுசெய்து விளக்கமாகச் சொல்லுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டார் அமைச்சர்.

'' நமக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நாட்டில் ஆட்சி செலுத்தியவர்கள் மக்கள் சுபிட்சம் அடைய வேண்டும் என்பதற்காக 'ஜனநாயக சோஷலிஸம்' என்ற முறையைக் கொண்டு வரவேண்டும் என்று தீர்மானித்து, அதற்கென என்னென்ன வழிகளைக் கையாண்டார்கள் என்று அந்தப் புத்தகத்தில் தரப்பட்டிருந்தது. அதே வழிகளை நானும் பின்பற்றினேன்.... விளைவுகளைத்தான் நீங்கள் பார்க்கிறீர்களே!.... இன்னும் இரண்டே மாதத்தில் கஜானா காலியாகி, நாம் ஓட்டாண்டியாகி விடுவோம் ! நம்ம பாடு ஜாலிதான் !'' என்றார் பிரதம மந்திரி உற்சாகத்துடன்.

''என்ன இருந்தாலும் சென்ற நூற்றாண்டு அரசியல்வாதிகள் நம்மைவிட மேதைகள் ! அபார மேதைகள்!'' என்று மனம் விட்டுப் பாராட்டினார் மந்திரி.

''அதில் என்ன சந்தேகம் ?'' என்றார் கி. பி. 2074ம் ஆண்டின் இந்தியப் பிரதமர்.

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்!
இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேஜர், டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன்.

பெயர் ______________________ வயது ________ K.S.BA

முகவரி ______________________

______________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும்:
ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM

# அடியாத மாடு!

## காட்சி 1

(சந்நிதித் தெருவில் பத்தாம் நம்பர் வீடு. மாலைவேளை. குடும்பத் தலைவர் குருமூர்த்தி சற்றே பயந்தவாறு வீட்டுக்குள் பிரவேசிக்கிறார். இடது கை நிறைய ஆபீஸ் பைல்களும் வலது கையில் டிபன் டப்பாவும் தாங்கி அவர் கதவைத் தாண்டி உள்ளே வரும்போது, ஹாலில் ஆளுக்கொரு நாற்காலியில் மனைவி பர்வதமும் மகள் பிட்டாவும் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுச் சற்றே தயங்குகிறார். ஆனால்...)

பர்வதம் (தலை நிமிராமலே): உள்ளே வரலாமே!...யாரும் பார்க்காட்டா மறுபடியும் வெளியில் சுத்தப் போயிடலாம்னு பிளானு?

குருமூர்த்தி (பதறிக் கொண்டு உள்ளே விரைந்து வந்து டப்பாவையும் பைல்களையும் மேஜைமேல் வைத்தவாறு): ஐயையோ, வெளியே சுத்தப் போவதா! ஏற்கெனவே லேட்டாப்போச்சுன்னு பறந்துண்டு ஓடிவரேன்....

பர்வதம்: ஏன் இவ்வளவு லேட்டு இன்னிக்கி! வீடுன்னு ஒண்ணு இருக்கறதே மறந்துண்டு வரதோ?

குரு (பய பக்தியுடன்): கெடையவே கெடையாது.. ஆபீஸ்லே ஆறு மணி வரைக்கும் வேலை கழுத்தை வாங்கிடுத்து: அப்பவும் தீரங்கலேங்கறதுனாலதான் வீட்டுக்கும் எடுத்துண்டு வந்திருக்கேன்.

(பைல்களைக் காட்டுகிறார்.)

பிட்டா: அம்மா, அப்பா புளுகுகிறார்.

குரு (மிரண்டு): இல்லவே இல்லே;வேணும்னு எங்க ஆபீஸ்லே வந்து நாளைக்கு விசாரிச்சுக்கலாம்.

பர்வதம் (தலை நிமிராமல்): விசாரிக்க மாட்டோம்கிற துணிச்சல்தான், வேறென்ன!

பிட்டா: ஆபீஸ்ல இருக்கிறவாள்ளாம் அரிச்சந்திர வம்சமாக்கும்!.....வேலிக்கு ஓணானோ சாட்சின்னு நீ சொல்லுவியேம்மா!.

பர்வதம்: ஒண்ணன்!...ஆபீஸ்லேருந்து நேர வந்தா லேட்டாகாது.

குரு: ஐயையோ! நேரே வரேன். வழியிலே எங்கேயும் நிக்கலே. (பேச்சை மாற்ற) இந்த டிபன் டப்பாவை வேணும்னு தேய்க்கப் போடட்டுமா?

பர்வதம் (குத்தலாக): பின்னே வேற என்ன பண்றதா உத்தேசம்? 'வேணும்னுத் தேய்க்கப் போடட்டுமா'ன்னு ஒரு கேள்வி!

பிட்டா (தானும் எழுந்து): அப்பாவைப் போல அருமையான ஆக்டரைப் பார்க்க முடியாது.

குரு (டிபன் டப்பாவை எடுத்துக் கொண்டு சற்றே நகர்ந்தவர், திரும்பி வந்து) காப்பி கலந்து வச்சிருக்கேன்னு நானே எடுத்துண்டுடறேன்.

பர்வதம் (சீறி): பின்னே? நீங்களே எடுத்துக்காம, என்னை வேலை வாங்கறதா உத்தேசமா? காப்பியெல்லாம் அஞ்சு மணிக்கே கலந்து வச்சாச்சு. சூடா வேணும்னு ஸ்டவ்வை மூட்டிச் சுடப் பண்ணிக்குங்கோ.

குரு (வேதனையுடன்): அஞ்சு மணிக்கே கலந்து வச்சுட்டயா? எனக்கே அஞ்சுக்குத்தான் ஆபீஸ் விடறது. எத்தனை வேகமா வந்தாலும் அஞ்சரைக்குத்தானே வர முடியும்?

பர்வதம் (கோபத்தை அடக்கிக் கொள்வது போல நடித்து): என் டியூட்டியை எனக்கு ஞாபகப்படுத்த வேண்டாம். அவாவா டியூட்டியை ஒழுங்காப் பண்ணினாப் போறும். சூடு வேணும்னு ஸ்டவ் எதுக்கு இருக்கு?



பூர்ணம் விசுவநாதன்



கிட்டா: ஆபீஸ்லேருந்து வீடு வந்து சேர்றதுக்கு மிஞ்சிப் போனா கால் மணி கூட ஆகாது அம்மா... எங்க காலேஜ் இன்னம் தள்ளி இருக்கு; அங்கேயிருந்து நானே பத்தே நிமிஷத்துலே வந்துடறேனே!

(குருமூர்த்தி பரிதாபமாக டிபன் டப்பாவுடன் உள்ளே போகிறார். பார்வதமும், கிட்டாவும் மீண்டும் உட்கார்ந்து கொள்கிறார்கள்.)

பார்வதம் (ரோஷத்துடன் தொண்டையடைக்க): ஏ அப்பா, எத்தனை குத்தல் பேச்சு!... அத்தனை எளப்பமாப் போயிட்டேன் நான்!

கிட்டா: நீ இதுக்காக வருத்தப்படாதேம்மா. அவர் குணம் அப்படி!

## காட்சி 2

(அதே சமயம் சந்திநித் தெருவில் ஒன்பதாம் நம்பர் வீடு.... அப்பாத்துரை புலிபோலச் சீறிக் கொண்டு வீட்டுக்குள் நுழைகிறவர், திண்ணையில் ரவி ஒரு தூணைப் பிடித்துக் கொண்டு நிற்பதைப் பார்த்தும் பொறுமை இழக்கிறார்.)

அப்பா (இடி இடிக்கும் குரலில்): டேய் ரவி! என்னடா பண்ணிண்டிருக்கே திண்ணையிலே நின்னுண்டு?

ரவி (பயந்து நடுங்கி): ஒண்ணுமில்லேப்பா.

அப்பா (ரவியின் சட்டையைப் பிடித்து இழுத்து உள்ளே தள்ளி): ஒண்ணுமே செய்யலேன்னு சொல்றதுக்கு ஒனக்கு வெட்கமாயில்லே? போடா உள்ளே.

(ரவியைத் தொடர்ந்து அப்பாத்துரையும் உள்ளே செல்கிறார். இதற்குள் அவருடைய உரத்த குரல் கேட்டு நடுங்கிக் கொண்டு காமாட்சி உள்ளேயிருந்து கூடத்துக்கு வருகிறாள்.)

காமாட்சி (கவலையுடன்): என்ன ஆச்சு?

அப்பா (அவள் மேல் சீறி விழுந்து): 'என்ன ஆச்சு'ன்னு பெரிய போலீஸ்காரர் மாதிரி விசாரிக்கண்டு இப்போ வரயே, இத்தனை நாழியா ஒன் அருமைப் புத்திரன் திண்ணையிலே தூணைப் பிடிக்கண்டு நின்னுண்டு தெருவிலே போற வைக்கோல் வண்டியைப் பார்த்து ரசிச்சிண்டிருந்தானே அப்போ நீ என்ன பண்ணிண்டிருந்தே?

காமாட்சி (அசட்டுச் சிரிப்புடன்): அதில்லே வாசல்லே ஒங்க கொரல் சத்தமாகக் கேட்டுது! என்னமோ, ஏதோன்னு ஓடி வரேன். இத்தனை நாழி உள்ளேதான் வேலையா இருந்தேன். ரவியை நான் கவனிக்கலே.

அப்பா (குரலை உயர்த்தி): ஏன் கவனிக்கலேங்கறதுதான் என்னோட கேள்வி. சமையலுள்ளேயே கத்திக் கத்தி வரது மட்டும்தான் ஒன் டியூட்டின்னு நெனைச்சுண்டயோ? நான் பூராவும் அப்படி என்ன வெட்டி முறிக்கப் போறேன். ஆபீஸ்லே உயிரைக் குடுத்து நான் பூரா ஒழைச்சுட்டு வீடு திரும்பற புருஷனுக்கு எது திருப்தியோ அதைச் செய்யுங்கோ ரெண்டு பேரும்! அதை விட்டுட்டு (ரவியின் முதுகில் அறைந்து) வைக்கோல் வண்டியை வேடிக்கை பார்த்துண்டிருக்கறதுன்னு இந்த வீட்டையே இடிச்சுப் போட்டுத் 'தொம்ஸம்' பண்ணிடுவேன்.

காமாட்சி: டிபன் பண்ணி வச்சிருக்கேன்.

அப்பா: நீங்க ரெண்டு பேரும் தலையிலே கொட்டிக்குங்கோ... மகா டிபன்! குத்தலை விலாஸ்லே போடற ஒரு பஜ்ஜிக்கு முன்னாலே நின்னுட முடியுமா?

(விர்ரென்று வெளியேறி மறைகிறார். காமாட்சி திகைத்து நிற்கிறாள். ரவி திடீரென்று விம்மி விம்மி அழுகிறான்.)

காமாட்சி (அருகில் சென்று அவனை அணைத்தவாறு): அழாதேடா கண்ணு.

ரவி (விம்மலுக்கிடையே முறைப்புடன்): இந்த அப்பா என்ன நெனைச்சிண்டிருக்கார்! சின்ன வயசுலேருந்து இன்னி வரைக்கும் இவர் என்னை அடிக்காத நாள் உண்டா? இதெல்லாம் என்னம்மா?

காமாட்சி: என்னப்பா பண்றது? அவர் குணம் அப்படி. பல்லைக் கடிச்சிண்டு இன்னம் அஞ்சாறு வருஷம் பொறுத்துக்கோ; நீ படிப்பை முடிச்சுட்டு ஒரு கல்யாணத்தையும் பண்ணிண்டு போயிட்டயானா, அவர் அதுக்கப்புறம் இப்படி அட்டகாசம் பண்ணிட முடியுமா?

ரவி: ரொம்ப அழகா இருக்கும்மா! இவரோட அடிக்கும் அதட்டலுக்கும் பயந்துண்டு நான் குடுகுடுன்னு ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கணுமா? இவருக்கு இருக்கற தூர்க்குணத்துக்கு என் பொண்டாட்டி கொழந்தைகள் எதிரிலேயே என்னை அடிச்சு அவமானப்படுத்தவும் தயங்க மாட்டார்!

## காட்சி 3

(இப்படி நாட்கள் சில சென்றபின்... ஒரு நாள். நெருங்கிய நண்பர்களாகிவிட்ட குருமூர்த்தியும், அப்பாத்துரையும் ஊர்ப் பூங்காவின் ஒரு மூலையில் பலத்த வாக்குவாதத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்; அதாவது, குருமூர்த்தி வழக்கம் போல் சோர்ந்து போய் உட்கார்ந்திருக்க, அப்பாத்துரை வழக்கம் போல் வாயடி அடிக்கிறார். ஆனால் இது வழக்கம் போல் வரும் ஒரு நாளல்ல; குருமூர்த்தியின் வாழ்க்கையே உருமாறுவதற்குக்காரணமான ஓர் அசாதாரண நாள்...)

அப்பா: என் பாயிண்ட் இதுதான்: நாம தான் ஓடறோம், சாடறோம், சம்பாதிக்கிறோம். அதுனால நாம வச்சதுதான் சட்டமா இருக்கணும். மத்த எல்லாரும் நமக்கு அடங்கித்தான் நடந்தாகணும்.

குரு: அது சரி, ஸ்வாமி! மனசிலே தைரியம் இல்லியே!

அப்பா: ஓய், குருமூர்த்தி, தைரியத்தை நாமதான்காணும் கௌப்பி விட்டுக்கணும். மொதலாவது இப்போ இருக்கற அடிமைப் பொழைப்பிலேருந்து விடுபடணும்கிற உறுதி வேணும் ஒமக்கு. அந்த ஆசையாவது இருக்கோல்லியோ மனசிலே?

குரு: அது இல்லாம என்ன? ஆனா ஆசையோடு நிக்க வேண்டியதுதான். ஒங்க மாதிரி வருமா? ஒயர ஒயரப் பறந்தாலும்...

அப்பா: ஓய், குருமூர்த்தி, நிறுத்தும் ஒம்ம பொலம்பலே. நம்ம முதுகெலும்போட பலத்தை நம்ம கொரல்தான் எடுத்துக் காட்டும். தொண்டையிலே ஒரு கம்பீரத்தைக் கொண்டு வாரும்... வேறொண்ணும் வேண்டாம். சாயங்கால வேளையிலேயோ, காலம்பற விடியறதுக்கு முன்னலேயோ இப்படிக் கொளக்கரைப் பக்கம் 'வாக்கிங்' போயி நன்னாத் தொண்டையை விட்டுக் கத்திப் பழகிக்கோம்.



குரு (வியப்புடன்): அது 'ஹெல்ப்' பண் ணுமா என்ன?

அப்பா: பின்னே! இப்போ என் கேஸையே எடுத்துக்கோமய்யா. வீட்டுலே நான் எப்ப வும் கொள்ளை போற மாதிரிதான் கூச்சல் போடுவேன். இதுக்காகவே நான் நெய்யி இய்யி எல்லாம் கொஞ்சம் ஜாஸ்தியாவே விட்டுண்டு சாப்பிடறது!

குரு: அப்பாதொரை ஸார், நீங்க இவ் வளவு சொன்னப்புறம் சொல்றேன்: வீட்டுல நான் படற அவஸ்தை கொஞ்ச நஞ்சமில்லே. ஒவ்வொரு சமயம் பார்க்கறபோது எங்கே யாவது ஓடிப் போயிடலாம்னு தோணறது!

அப்பா (பதறி): ஐயையோ! அது பயந் தாங்கொள்ளித்தனம் அய்யா. ஓடிப் போயி என்ன பண்ணறதா உத்தேசம்?

குரு: அப்பாதொரை ஸார், நீங்க சொல் றதைக் கேக்க கேக்க எனக்கும் ஆவேசமாகத் தான் இருக்கு; ஆனா...

அப்பா (குறுக்கிட்டு): நோ, நோ ஆவே சம் வந்தப்பறம் "ஆனா"ங்கற பேச்சே வரப்படாது.

குரு: எனக்கும் ஸார், நெனெக்க, நெனெக்க எவ்வளவு கொதிப்பா இருக்கு தெரியுமா? இவ்வளவு நெருங்கிப் பழகிட்டதுனால கேக் கறேன்: நீங்கதான் எனக்கு வழிகாட்டணும்; எனக்கு இனிமே நீங்கதான் குரு மாதிரி.

அப்பா: என்னை குருவா ஏத்துண்டுட் டீரோ இல்லையோ? இனிமே நான் சொல்ற படி கேக்கணும். அந்தக் காலம் மாதிரி குரு வுக்கு வேஷ்டி தோய்ச்சுப் போட்டுண்டு முது கைச் சொறிஞ்சுண்டு பட்டினி கெடக்க ணும்னு நான் சொல்லல்லே. எனக்கு என் வேஷ்டியை நானே தோய்ச்சுண்டு என் முதுகை நானே விசிறிக் காம்பாலே சொறிஞ் சுண்டுதான் பழக்கம். நான் இப்போ சொல் லப்போறது வேறே: ஒமக்கு ஒரு வாரம் லீவு போட முடியுமா?

குரு (பதறி): ஐயையோ, லீவா? நான் லீவே எடுத்ததில்லே நாலு வருஷமா... என்னு லீவு எடுத்துண்டு வீட்டுல ஒக்கார்ற துக்குப் பயமா இருக்கு.

அப்பா (எரிச்சலுடன்): அட ஒம்மை எவனய்யா வீட்ல ஒக்காரச் சொன்னான்? லீவ் ஒரு வாரத்துக்கு எடுத்துண்டு எங்கூடப் பொறப்பட்டு வாரும்.

குரு: எங்கே?

அப்பா: எங்கோ வெளியூருக்குப் போறோம். 'டூர்'னு சொல்லிட்டுப் பொறப்படும். நானும் லீவு போடறேன். நாம சேர்ந்து போறதோ, சேர்ந்து திரும்பி வரதோ யாருக்கும் தெரிய வேண்டாம். முன்னே பின்னே பொறப்பட்டு ரயில்வே ஸ்டேஷன்ல "மீட்" பண்ணுவோம். ஊர் திரும்பினப் புறம் ஸ்டேஷன்லே பிரிஞ்சு முன்னே பின்னே பொறப்பட்டு வீடு திரும்புவோம். சரிதானு?

குரு: அது சரி, ஆனா ஊருக்குப் போறது எதுக்காகன்னு நீங்க சொல்லலியே!

அப்பா: ஊர்லே ஒரு முழு வாரம் ஒமக்கு 'ட்ரெயினிங்' குடுக்கப் போறேன். ஒம்ம முது கெலும்பை அங்கே தட்டி நிமுத்தி ஒம்மை ஒரு சூரனாக்கி இங்கே கொண்டு வந்துவிடப் போறேன். அப்புறம் ஒம்மை நீரே சந்திக்கப் பயப்படுவீர்.

குரு: அப்பிடியா? (குஷியாக) நான் ரெடி இந்த ஏற்பாட்டுக்கு.

அப்பா: நான் இதுக்கு எவ்வளவு பெரிய தியாகம் பண்றேன் தெரியுமா? குடும் பத்தை விட்டு ஒரு நாள் கூட அந்தண்டை இந்தண்டை நகராதவன் ஒமக்காக ஒரு



வாரம் பிரிஞ்சு வரேன். சாமான்யமில்லெய்யா....

குரு (கண் கலங்க): இந்த ஒபகாரத்தை ஒரு நாளும்...

அப்பா (குறுக்கிட்டு): நான் மறக்க விடமாட்டேன், நீர் மறக்க நெனைச்சாலும்.

### காட்சி 4

(ஒரு வார லீவும் போனதே தெரியவில்லை. கடும் பயிற்சி முடிந்து அப்பாத்துரையுடன் குருமூர்த்தி ரயில் வண்டியில் திரும்பி வந்து கொண்டிருக்கிறார். அவருடைய மொத்த உருவத்திலேயே இந்த மாறுதலும், அவருடைய கண்களில் இந்த வெறியும் எப்படி வந்தன! இந்த அப்பாத்துரை ஓர் அசகாய சூரர்தான், சந்தேகமேயில்லை... அது சரி, அப்பாத்துரைக்கு இந்த ஒரு வாரத்தில் என்ன ஆகிவிட்டது! பார்க்க நன்றாகவே இல்லையே! உருவத்தில் ஒரு தொய்வு. கண்களில் ஒரு சோர்வு. பாவம், குருமூர்த்தியை ஆளாக்கும் பணியில் இவர் கரைந்துதான் போயிருக்கிறார்.....)

குரு (கையிலிருக்கும் குறிப்புக்களை ஒரு தடவை புரட்டிப் பார்த்துவிட்டுத் திருப்தியுடன்): அப்பாதொரை ஸார், காலம்பர பொறப்படறதுக்கு முன்னாலெ கடைசியா ஒரு கத்தல் போட்டேனே, சரியா யிருந்ததா?

அப்பா: கரெக்டா இருந்தது. அந்தச் சுருதிக்கு மேலே போக வேண்டாம்; அப்புறம் கொரல் 'க்ரீச்'சுன்னு கிழிஞ்ச மாதிரிப் போயி, கேலிக்கு எடமாயிடும்.

குரு: கொரல் சரி, நான் போடற வார்த்தைகளெல்லாம் கரெக்டா விழறதா?

அப்பா: பரவாயில்லே. சரியாப் பாடமாயிருக்கு. இருந்தாக்கூட நீர் எக்காரணம் கொண்டும் ''டயலாக்''கையே நெனைச்சிண்டு உணர்ச்சியை மறந்துடக் கூடாது. இந்த மாதிரி 'ரோல்'லெல்லாம் வசனத்தைச் சரியாச் சொல்லாம விட்டேளோ, எதிராளி நம்மைச் சுருட்டி வீசிப்புடுவான், ஜாக்கிரதை!

குரு: ஓ. கவனமா இருப்பேன். இந்த ஒரு வாரம் விடுதலை கெடச்சதுலெ நான் புது ஆளாயிட்டேன்.

அப்பா (பெருமூச்சுடன்): எனக்கென்னமோ இந்த ஒரு வாரம் குடும்பத்தைப் பிரிஞ்சிருந்தது மனசை என்னமோ பண்ணிடுத்து: ஹ¨ம்ம்!

### காட்சி 5

(சந்நிதித் தெருவில் பத்தாம் நம்பர் வீடு. மாலை வேளை. பர்வதமும், கிட்டாவும் ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்... அடடே, இவர்களுடைய குரலில் பழைய காத்திரத்தையே காணுமே! என்ன ஆயிற்று ?)

பர்வதம் (கவலையுடன்): இருட்டப் போகிறதே! இன்னம் காணமே!

கிட்டா: வண்டி இதுக்குள்ள வந்திருக்கணும்... ஒருவேளை வீட்டுக்கு வரப் பயந்துண்டு நாழியாக்கறாரோ!... ஹ¨ம், நம்மை என்ன பண்ணினாலும் பாவமில்லே.



பர்வதம் (தொண்டை அடைக்க): ஐயையோ, இங்கே இருந்த வரையிலும் அவரைப் போக வர விரட்டிண்டிருந்து விட்டு இப்போ, அவர் ஒரு வாரம் இங்கே இல்லாதது மனசுக்கு என்னமோ ரொம்பப் பறி கொடுத்தது மாதிரி இருக்குடா.

(திடீரென்று வாசலில் குதிரை வண்டி ஒன்று வாயு வேகத்தில் வந்து நிற்கிறது. அதிலிருந்து குருமூர்த்தி அட்டகாசமாக இறங்கிப் புயல் போலச் சீறிக் கொண்டு உள்ளே வருகிறார்.)

குரு (என்ன நடக்கிறது என்று யாரும் உணரு முன்னர் ஒரு பாய்ச்சலில் கிட்டாவின் சட்டையைப் பிடித்து இழுத்து அவன் முதுகில் அறைந்து தொண்டை கிழிய) என்னடா, மரமாட்டமா நிக்கறே, தடிமாடு, ஓடுடா, வண்டியிலேருந்து பொட்டி படுக்கையெல்லாம் எடுத்துண்டு வாடா.

(கிட்டா, வாழ்க்கையில் முதன் முதலாக விழுந்த அடியின் வேகம் தாங்காமல், தரையில் பொத்தென்று விழுந்து எழுந்து வாசற் பக்கம் ஓடுகிறான் பர்வதம் திகைத்து நிற்கிறாள்.)

குரு (ஆவேசத்தை விடாமல் குரலை உயர்த்தி): ஏ பர்வதம், ஒனக்கு அறிவில்லே? ஓமர் மாதிரி எதுக்கு நிக்கறே? ''ஊர்''லேருந்து வந்திருக்கேன், காப்பி கொண்டு வரணும்கிற மரியாதைகூட ஒனக்கு மறந்து போச்சா?

பர்வதம் (திகைப்பு நீங்காமல் உள்ளே நகர்ந்தவாறு): இதோ ஒரு நிமிஷம். எல்லாம் ரெடியா இருக்கு. இப்போதான் போட்டேன்.

(குருமூர்த்தி தம் கண்களையே நம்ப முடியாமல் நிற்கிறார். இதற்குள் கிட்டா பரபரப்புடன் பெட்டி படுக்கையைக் கொண்டு வந்து வைத்துவிட்டுத் திரும்புகிறான்.)

குரு (பர்ஸிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்துக் கீழே வீசி): டேய் வெறும் பயலே, எங்கேடா நழுவறே? இந்தப் பணத்தைக் கொண்டு போய் வண்டிக்காரன் மொகரக் கட்டையில் வீசிட்டு வா.

கிட்டா (நடுக்கத்துடன் ரூபாயைப் பொறுக்கிக்கொண்டே) இதோப்பா...

குரு (உரக்க): வண்டிச் சத்தத்தைக் குடுத்துட்டு வா ஜல்தி. ஒங்க ரெண்டு பேர்கிட்டவும் எனக்கு இப்பவே நெறையப் பேச வேண்டியிருக்கு. (கிட்டா குலைநடுங்க வாசற் பக்கம் ஓடிய பின் சுற்று முற்றும் பார்த்துவிட்டுத் தனக்குள்) ஏ அப்பா. கோபாவேசம்கிறது இவ்வளவு கஷ்டமான

# கல்யாண்ஜியின் கல்யாண ஜோக்குகள்



● "வெள்ளி விழா நெருங்கி விட்டது!" என்றார் கல்யாண்ஜி.

"விக்டோரியா 203 வந்து இன்னும் பத்து வாரம் ஆகவில்லை. அதற்குள் எதற்கு சில்வர் ஜூபிலி?"

"அதைப் பற்றி நான் எங்கே சொன்னேன்? எனக்குக் கல்யாணமாகி இருபத்தைந்து வருஷம் ஆகப்போகிறது என்றல்லவா சொன்னேன்!"

"அப்படியா! மெத்த மகிழ்ச்சி!"

"இதில் மகிழ்வதற்கு என்ன இருக்கிறது?" முகத்தைக் கம்பீரமாக வைத்துக் கொண்டு கல்யாண்ஜி சொன்னார்:

"இன்று காலை என் மனைவி பூஜை செய்து கொண்டிருந்தாள். திருமண வெள்ளி விழாவை நினைவுபடுத்தி, அடுத்த பிறவியிலும் என்னையே கணவராக அடைய வேண்டுவதாகக் கூறினாள்."

"நியாயம்தானே?"

"எது நியாயம்?"

"அவள் வேண்டிக்கொண்டது?"

"அதைத்தான் நானும் சொன்னேன். அடுத்த பிறவியைப் பற்றி அப்புறம் பார்த்துக்கொள்வோம். இந்தப் பிறவியில் என்னை ஆள விடேன் என்று!" என்றார் கல்யாண்ஜி.

* * *

● ஒரு நாள் நண்பர் ஒருவர் தம் திருமணத்துக்குக் கட்டாயம் வரவேண்டும் என்று கல்யாண்ஜியை வருந்தி அழைத்தார். முடியாது என்று மறுத்து விட்டார் கல்யாண்ஜி.

ஆனால் திருமண சமயத்துக்குச் சரியாகப் போய்ச் சேர்ந்தார். "வரவே முடியாது என்று சொன்னீர்களே!" என்று கேட்டார் நண்பர்.



"மறுத்தது என்னவோ மெய்தான். ஆனால் யோசித்துப் பார்த்தேன். ஆபத்துக்கு உதவுபவன் தான் நண்பன் என்கிற பழமொழி நினைவுக்கு வந்தது! உடனே வந்து விட்டேன்!" - மாதுரி

காரியமா? பத்து வார்த்தை கத்தறதுக்குள்ளே மண்டையைக் கத்தறதே! கடவுளே காப்பாத்து! (மீண்டும் பற்களை நற நறவென்று நொறுக்கிக் கொண்டு போரைத் தொடர்ந்து நடத்த ஆயத்தமாகிறார்.)

## காட்சி 6

(பத்தாம் நம்பர் வீட்டிலிருந்து குதிரை வண்டி புறப்பட்டுப் போய் விட்டது. அப்போது ஒன்பதாம் நம்பர் வீட்டின் ஜன்னலில்..... காமாட்சியும் ரவியும் இடுப்பில் கை வைத்து நின்றவாறு வாசற் கதவையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய தோற்றத்தில் திடீரென்று இதென்ன மாறுதல்!)

காமாட்சி (ஆத்திரம் பொங்க): இவர் மனசுலே என்ன நெனைச்சுண்டிருக்கார்? ஆறரை மணிக்கே வண்டி வந்திருக்கணும். இத்தனை நாழியா வீடு வந்து சேர?

ரவி: இவரோட கோபாவேசத்துக்கு வழியிலே எங்காவது நின்னுண்டு சண்டை போட்டுண்டிருக்காரோ என்னவோ?

காமாட்சி: அது என்ன கோபாவேசங்கறத்தை நான் பார்க்காம விடப் போறேனா? (மூச்சுத் திணற) என்னடா இது. இத்தனை நாளும் நாம ரெண்டு பேரும் புழுக்கள் மாதிரி இவரோட ஆட்டத்துக்கெல்லாம் சவுண்டு சவுண்டு போயிண்டிருந்தோமே! நெனைச்சா அவமானமா இருக்கு!

ரவி: இவரோட கொடுங்கோலாட்சிலேருந்து இப்படி ஒரு வாரம் விடுதலை கெடைச்சிருக்கலேன்னா, நமக்கு இந்த அளவுக்கு ரோசம் வந்திருக்குமா?

(வண்டியிலிருந்து அப்பாத்துரை துவண்டு போய் இறங்கிக் களைப்புடன் நிமிர்ந்து பார்க்கிறார். வாசற் கதவருகே காமாட்சியும் ரவியும் இடுப்பில் கை வைத்து நிற்கும் தோரணையைப் பார்த்து அவர் அப்படியே திகைத்துப் போகிறார்.)

காமாட்சி (ஆவேசத்துடன் உரக்க): நேரே உள்ளே வந்துவிட வேண்டாம். பொட்டி படுக்கையை யெல்லாம் தூக்கிண்டு வாங்கோ. (அப்பாதுரை யந்திரம் போல வண்டிச் சத்தத்தைக் கொடுத்துவிட்டுப் பெட்டி படுக்கையுடன் உள்ளே வர) வீட்டிலே சாக்கிரி வேலை செய்யறதுக்கு ஆள் யாரும் இல்லே தெரிஞ்சிருக்கட்டும்.

ரவி: டிரெயின் எப்பவோ வந்தாச்சு, ஏன் லேட்டுன்னு கேளம்மா.

காமாட்சி (உள்ளே நகர்ந்து கொண்டே) கேக்காமவிடப் போறேனா! கொட்டிஞ்சுத்தான் தேள், கொட்டாட்டாப் பிள்ளைப் பூச்சி! உள்ளே வாங்கோ சொல்றேன்!

(காமாட்சியும் ரவியும் முன்னே செல்ல அப்பாதுரை பெட்டி படுக்கையுடன் பின்தொடருகிறார். போராடச் சக்தியற்ற நிலை அவரது நடையில் தெரிகிறது.)

திரை

### நாடக பாத்திரங்கள்

அப்பாத்துரை — பூர்ணம் விசுவநாதன்
குருமூர்த்தி — ராஜகோபால்
ரவி — சந்தர்
கிட்டா — சந்துரு
காமாட்சி — விஜயப்பிரியா
பார்வதம் — சோபா

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*




**It is Asia's finest Illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social economic, cultural

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

.ll written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.




**The Illustrated Weekly of India**




Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை




## அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

வைட்டமின்கள் மற்றும் தாதுப்பொருள்களின் பற்றுக்குறை குடும்ப ஆரோக்கியத்தைப் பாதிக்கக் கூடும். சோர்வு, ஜல தோஷம், பசியின்மை, உடல் இளைத்தல், சரும மற்றும் பல் உபாதைகளுக்குக் காரணம் இவற்றின் பற்றுக்குறைதான்.

திட்டமிடப்பட்ட உணவில் கூட இக்குறை காணப்படுகிறது. அவ்வாறின்றி குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் தேவையான அளவில் இந்த இன்றியமையாத சத்துக்கள் கிடைக்க தினம் விம்க்ரான் கொடுங்கள்.

விம்க்ரானில் 11 முக்கிய வைட்டமின்களும் 8 தாதுப் பொருட்களும் அடங்கியுள்ளன. இரும்புச் சத்து—இரத்தப் பெருக்கத்திற்கும், சுறுசுறுப்பிற்கும், கால்ஷியம்—எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைக்கவும், வைட்டமின் 'ஸி'—ஜல தோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்கவும், வைட்டமின் ஏ—சிறந்த கண்பார்வைக்கும் ஆரோக்ய சருமத்திற்கும், வைட்டமின் பி12—பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் இவற்றுடன் இதர போஷாக்குச் சத்துக்களும் உள்ளன. இன்று முதல் தினம் உட்கொள்வீர்—விம்க்ரான்!

# விம்க்ரான்®

பலவேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்
11 வைட்டமின்கள் + 8 தாதுப் பொருட்கள்



SQUIBB®
SARABHAI CHEMICALS PVT. LTD.

ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது

Shilpi-HPMA 2A/74 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)